உடல்பொருளொடாவியுங் கைப்பற்றியெனையாளுமாக்கமென்றுமொளிர்கவே, ஊனுருகியுயிராகி யூனுயிர்க்குயிரான வுண்மையென்றுமொளிர்கவே, இடையறாதொடரா துடர்ந்தேறுமெய்ஞ்ஞான திரமென்றுமொளிர்கவே, திவ்யகருணாகர முகம்மதரேனுமாமருட் செல்வமென்றுமொளிர்கவே, கொடியோடுகொழுகொம்ப தாகநீர்வந்துறுதி கொண்டெனது முன்னிற்கவே, தொழுதுமெய்யானவடி வேயுனதுமைமங்கம்பினேனைக் கொண்டவானந்தாருதம்பே, வடிவிலாநடைபிடியுள்ளநீர் பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிரு கண்மணியே முகியித்தீனே. ௫

சதகம் முதலாவது பதிகம் முற்றிற்று ஆக-பாடல்-௨௪.



அம்பொருடனே வெம்பொருட்குணமு
மொப்பியமொப்பா தாகியவுண்மையைப்
பிரியாதுகெரிசிக்கப் பிரியமாயெனக்கருங்
கருணைகூர்ந்தருள்கென்க் கனித்துநின்றிரத்தல்

நித்தமாகின்றநிருவிகற்ப நிஷ்டாபரா கணைற்றினேரிட்டபொருளை, நிச்சயவசேகாசரத்தாதாரபேதநிலைநின்றுநிறைகின்றபொருளை, முத்திக்குவித்தாய்முளைத்துவிளைபொருளையருண்மெய்த்தசுடருற்றபொருளை, மும்மண்டலங்களுங்கொண்டமலாதாரமோனவடிவான பொருளை, புத்திக்குமெட்டாதபுத்திக்குணின்றிகாசு போகக்குவாவற்ற பொருளை, போதவருள் பரியவடிவேயுனதுமைமங்கம்பினேன்புனிதமுடனுருதந்கே, மந்தமதயானைநிகருள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே.

பொங்குமொடு முத்தியுமகிட்சியுமிகட்சியுமயுன்னுமுன்னுங்கெட்டதை, பெரிதுசிறிதருவுருவொட்டுவிதென்பவும்பிறப்பும்பிறப்புங்கெட்டதை, நிந்தித்தலோடும் வந்தித்தலும்பொய்மையெய்தி நிசமென்பதுங் கெட்டதை, நீநானெனலுமொன்றிரண்டெனலுநீதமொடநீதமெனலுங்கெட்டதை, இந்திரகல்போய்குடனவரவுமனவாக்கொடுங்கெங்கேகெடதுங்கெட்டதை, அறியாமலறிவடிவேயுனதுமைமங்கம்பினேன் றறியவுக்தாருதம்கே, வந்தடிமைகொள்ளவுன முன்னோம்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிரு கண்மணியே முகியித்தீனே. ௨

முக்கரவமணியையொளிபத்தியாயும் மணியையமொன்றுமான மணியை, மொய்த்தகதிர் மாசிலாமணியிலமைவானதிய முவுலகுயர்

மணியை, சித்திமணியைச் சித்திதருமத்திமணியை யென்சிந்தைதருங் கொண்டமணியை, இப்பருமணியாலிழைத்த சிங்காசனச்சிகரத்தி னுச்சிமணியைபக்தர்கட்கெய்துஞ்சூடாமணியை நிறைபார்த்தபரமார்த்த மானமணியை, பணிபூண்டபோர்க்கவடி யேனு மும்மைநம்பினேன்பணி பூட்டியாளுந்தறகே, வைத்தசீபத்திமிகருள்ள நீர்பின்றொடரவள்ளலிற சூல்வருகவே, வளருமருணிறை குணங்குடிவாழுமென்னிரு கண்மணி யே முகியித்தீனே. ௩

காரமெனப் பொருட்கடலின் நின்றிகளின்ற கருணைமுகிலைக், கண்வட்டப்பெருவெளிக்குமப்பாலிவருகாலுரன் றங்கின்றமுகிலை, தாராத வருடங்கருதுமென முகிலையெனாரும்விம் தழுகிலைச், சுண்டமாருதமெ ன்ன வருளபொழிபு முகிலைச்சாராசரங்கொண்ட முகிலை, பாராதிபஞ்ச வண்ணப்பகுதியாகப்பாரத்துவ நடிக்குமுகிலை, பரிவருடிக்கவடியேனு மும்மைநம்பினேன்பருவம்வந்தாளுந்தற்கே. வர்ரநெறிக்கருணையுள்ளநீ ர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே வளருமருணிறைகுணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. ௪

சுத்திபோகங்கறப்பெருகிவருமானந்தசலரகமீபெருவாரியை, சார்ந் தன்பரிதயங்களிக்கவேபொங்கிவருசந்தகச் சுகவாரியை, சுற்றிக்கலிந் து கொண்டெங்குமொருமிககவேசூழ்கருணை நிறைவாரியை, சொற்பி ரகாகந்தருசுயஞ்சோதியாய்நின்றசோமசுந்தரவாரியை, எத்தனைவிதங் கொண்டு சொல்லினுஞ்சொல்லொணுவினிபூர்ணவாரியை, ஏப்பமிட வூட்டவடியேனு மும்மைநம்பினேனெட்டிவந்தாளுதற்கே, மத்திபத்தி பருகிவுள்ளனீர்பின்றொடரவள்ளலிறசூழ்வருகவே, வளருமருணிறைகு ணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. ௫

அன்புப்பெருக்கைநல்லறிவுப்பெருக்கை மெஞ்ஞானுயிர்தப்பெரு க்கை, அணையற்றபேரானசவெள்ளப்பெருக்கையறிவாகார வான்பெரு க்கை, இன்பப்பெருக்கையருள்பொங்குப்பெருக்கைவெளியெங்கெங்கு மொளிபெருக்கை, ஏகப்பெருக்கை யனுபோகப் பெருக்கைநல்லினி யசெந்தேன்பெருக்கை, தென்புப்பெருக்கைவெகுடப்பப்பெருக்கைமா திவ்யமதுரப்பெருக்கை, சேரப்புகட்டவடி யேனு மும்மைநம்பினேன் சி த்தம் வைத்தாளுவதற்கே, வன்புப்பெருக்குவடிவுள்ளனீர்பின்றொடரவ ள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறை குணங்குடிவாழு மென்னிருக ண்மணியே முகியித்தீனே. ௬

கண்டபொருளத்தனையும் ஆகிநின்றவைகளுங்காணுதகாரணத்தை, கருதரியசித்தாய்விசித்திரமாய் நின்றிலங்காநின்றகாரணத்தை, அண்ட கோடிகளையுந்தன்னுள்வைத்தணுவினுக்கணுவானகாரணத்தை, அறி யாமலெல்லாத்தெய்வ முந்தெய்வமென்பார்க்குமவ்வகைக்காரணத்தை யெ ண்டிசைகளிலாகின்றவித்தியாயிருந்துவோரிடமற்றகாரணத்தை எய்தி

க்களிக்கவடியேனுமுமைநம்பினேனெதிர்காட்டியசருதம்சே, மண்டலமும்விண்டலமுமுள்ளனீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௭

நிலையமுடனெங்கணுங் கோத்ரநிலைகுலையாதுநின்றதே சோமயத்தை, நெற்றிவிழியூடுநிலைநின்றொருளர்தனிநெளிந்ததே சோமயத்தை, தொலையாதிலங்குரியாதிகமானவைத்துவித்தேசோமயத்தை, தொங்கக்கடிந்தவர்களுந்திக்குள் வண்டாய்த்துவண்டதே சோமயத்தைச், சலியாதவைராக்கியதீரனையனுப்பறச்சார்ந்ததேசோமயத்தை, சதமுமெற்கருளவடியேனுமுமைநம்பினேன்சலுதிவந்தாளுதம்கே, மலிகருணைமிககவலியுள்ளனீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௮

எல்லைநிலைசொல்லரியவல்லமையொடெங்கணுமிருந்த ஞானோதயத்தை, எப்பொருளுமெப்பொழுதுமெவ்விடமுமவ்வடிவிலங்குஞானோதயத்தை, அல்லினும்பகலினுமன்பர்மனவில்லினிலடைந்தஞானோதயத்தை, அழியாப்பதிக்குவந்தாற்குணங்குடியாரனைந்தஞானோதயத்தை தொல்லையறுநல்லறிஞர் சொல்லும்வழிசெல்லின்வெளி தோற்றுஞானோதயத்தை, தொழுதழப்பாவியடியேனுமுமைநம்பினேன் றொண்டுகொண்டாளுதற்கே, வல்லபஞ்சொல்லவந்துருளனீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. ௯

தொலையாதவரன்கருணைகுடிகொண்டிருந்ததேசோமயானந்தகுருவைச், சொற்கமுடனென்றனையும்வந்தடிமைகொண்டேசுகாந்தமௌனகுருவை, நிலையாதலாயைநிலையாதமாயைநிலைகுலையநிலைகுலையாநெறிதந்தஞானகுருவை நித்தியானந்தசுகமுற்றமகுமூதென்றநிஷ்டைநேரிட்டகுருவை, சலியாதனைத்துமுத்தந்தாவெனைப்பெற்றதந்தையாம்வந்தகுருவைத், தழுவவறியாதவடியேனுமுமைநம்பினேன்றயைபுரிந்தாளுதற்கே, மலைகள்பொடிபடநடபுமுள்ளனீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௰

௨-வது-பதிகம்-முற்றிற்று-ஆக-பாடல்-௩௪.

---

பண்மையாய்விரித்த பல்பொருளெலாமதன்
றண்மையாயிருந்த தகுதியைவிளக்கு
மருளொளிவிளக்கினை யருள்கவென்றுசான்
றெருளொளிபதமலர் சிந்தைசெய்திரதல்

நிலைகுலையுண்டுபோகாதுநிலையுண்டசிற்சத்திதெளியுமாகிச், செறியுமொளிபுரியவடியேனு முமைநம்பினேன் தெளிவுதந்தாளுதற்கே, வார்த்தைதப்பாதநாவுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருவவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென் னிருகண்மணியேமுகியித்தீனே. ரு

நடையுடன்கிடையாகிநண் ணுமிருவினையாகிநடைபடிகடானுமாகி, நடுவேமுளைத்தநீநானெனலுமாகிவருநாட்டங்கடானுமாகி, தடையாகிவைத்ததகையற்ற விடையாகி நற்றரணைகடானுமாகி, தலைமையொடுநிலைமையும்வலிமைகளுமாகியெச் சங்கதைகடானுமாகி, இடையாகிநடுவாகிநன்மைதீமையுமாகி யேகமுதலைவையுமாகி, இலகுமொளிபுரியவடியேனுமுமைநம்பினே னிதமுரைத்தாளுதற்கே, மடமடெனவடிநடனருள்ளநீர் பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. சு

மாயைமுதலாகியுயிராகியற்புதமான மன்னுயிர்க்குயிருமாகி, வாருமிருவினையாகிருவினையுனக்கீடாகிவாழ்பாழுடம்புமாகி, தூயறிவுகலையாகிநிலையாகி தொந்தங்கடானுமாகி, துறவாகி மூவாசையுறவாகிமறவாகி சோதிப்பிரகாசமாகி, ஆயுமறை முடிவாகியடியாகிநடுவாகி ஆச்சரியகூத்துமாகி, ஆடுமொளிபுரிய வடியேனுமுமைநம்பினேனன்புகூர்ந்தாளுதற்கே, வாயூறுதேனினமொழியுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. எ

கண்ணானகண்ணே யென்னன்னமேயென்றழுவர்கண்ட கண்காட்சியாகி, கவலைகடிகொண்டு தட்டழியார்கணன் மனக்கண்ணாடிதானுமாகி மண்ணானவஞ்சநெஞ்சத்தினர்க்கேற்றதுமறைவுதருபுனையலாகி, மதபேதமோது மதிகெட்டவர்க்கெட்டாதவரன்கருணைவெள்ளமாகி, எண்ணாதவெண்ணமெண்ணொடுத்துண்டபேரின்பப்பெருக்குமாகிஎய்துமொழிபுரியவடியேனுமுமைநம்பினே னின்புதந்தாளுதற்கே, வண்ணத்திருக்கருணை யுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென் னிருகண்மணியே முகியித்தினே. அ

வேதவேதாந்த மேல்வீடாகிநட்டநடு வீட்டின்விளக்குமாகி, வித்தகனிருக்குநவமணிமாடமாகியொளி விரித்திரச்சுடருமாகி, நாதகீதம்பல முழக்கமிட்டோலமிடுநாதநாதாந்தமாகி, நற்குணங்குடியானெனப்பெனக்கருளுஞானதிருநாமமாகி, ஆதிமுதலந்தமுந்தானாகவிரிவாய்கண்டிதாகாரமாகி, அவிருவமாமிபுரியவடியேனுமுமைநம்பினே னறிவுதந்தாளுதற்கே, மாதூயபாதமலருள்ளநீர்பின்றொடர்வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. கூ

கங்குல்பகலற்றவருடங்குமெங்கெங்குநிறைகாரணக்கடவுளாகி, கங்கறப்பொங்குகருணைக்கடலுமாகியென்கரகலாமலகமாகி, சிங்கத்தையொத்துவினைதன்னைச்செயங்கொண்டதேசிகன்றானுமாகித், தேறுதீரக்குணங்குடி வாட்கையெற்குதவத்திவ்யகுண மேருவாகி, எங்கேயிருக்கினும்மங்குவந்துதவிதருமெங்கண்மதுமூதராகி, இயையுமருள்புரியவடியேனுமுமைநம்பினேனெளிதில்வந்தாளுதற்கே, மங்களசௌந்தரியமுள்ளநீர் பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. ய

௩வது பதிகம் முற்றிற்று ஆகபாடல் சச.

அருள்கூர்ந்தகாட்சியாகிய வுண்மையுப்
பொருள்கூர்ந்துகாண்போன் வேறெனப்பொருந்தா
தொன்றுமுறைமையோதுக விவ்விடை
யின்றுகவருள்கவென் றிரங்கியிரத்தல்.

பாரீரோவென்னையென் னன்னையென்முகம் பார்த்தருள்பழுத்திடீரோ, பாவிகன்னெஞ்சவஞ்சஞ்சிந்தவந்துமதுபாதத்தழுத்திடீரோ, வாரீரோவென்னெதிரில்வந்தெனக்கொருமுத்தம்வாய்கொண்டளித்திடீரோ, மகிழீரோபுகழீரோ கருணைகூர்ந்தெனையாளவாவென்றழைத்திடீரோ, சேரீரோவென்னையுஞ் சேர்ந்தோர்க்கு முமதருட்டேறத் தெளிந்திடீரோ, சிந்தைநொந்திடையுமடியேனுமுமைநம்பினேன் சித்தம்வைத்தாளுதற்கே, வாரோமெனச்சொன்ன துள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, மளருமருணிறைகுணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. க

எங்கட்குடிக்கரசரோயுமதுபாதமெற் கெய்தாததென்னகுறையோ, என்றெய்வமுன்றெய்வமென்றகுறையோ வல்லதிடி சாபமானகுறையோ, பங்குகூறிட்டகுறையோ பாவிபாழ்மனதுபக்தியில்லாதகுறையோ, பகலையிருளென்றகுறையோ வீண்படாந்தரப்படுநிலமானகுறையோ, அங்குமிங்குங் கெட்டலைந்தகுறையோ தேடியலையாதிருந்தகுறையோ, அறியாமலிடையுமடியேனுமுமைநம்பினேனணைவுதந்தாளுதற்கே, வங்கமாயன் பாழியுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தினே. உ

கல்லிலோமண்ணிலோ விண்ணிலோவடிமையிருகண்ணிலோ கண்ணீரிலோ, கனாயிலோகடலிலோவுயிரிலோ வுடலிலோகதியானபூமிதனிலோ, அல்லிலோபகலிலோநல்லிதயவில்லிலோ அறிவிலோவுருநீதிலோ, அறிவிலோ வறியொணுமறைபிலோ ம

றைகண்முதலாகமபுராணத்திலோ,செல்வமிகுதுரைராசனேதேரீர்க்குநிலைதிவ்வியகுணங்குடியிலோதெரியாமலிடையுமடியேனுமுமைநம்பினேன் சேர்ந்தணைந்தாளுதற்கே மல்லிகைமலர்க்கந்தமுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. ௩

ஓயாதோவென்கவலை யுள்ளுருகியானந்த முள்ளிலைபாய்ந்திடாதோ, தீயாதோவன்கருவிகாயாதோகரணங்கடீவினைகடீர்ந்திடாதோ, தேறாதோபாழ்மனது சாராதோபேரறிவு திவ்யகுணம்வாய்ந்திடாதோ, பேயாதோவருண்மாரிவாயாதோவான்கருணைபேரின்பநேரிடாதோ, பெருகநின்றிடையரடியேனுமுமைநம்பினேன் பிரியமுடனாளுதற்கே, வாயிற்சிறந்தமொழியுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௪

நாடுமோமுத்திவழிகூடுமோநெற்றிவிழிநல்லறிவுபந்தாடுமோ, நற்குணங்குடிமீது வீடுதரவென்றனையு நாதனருளுந்தேடுமோ, ஆடுமோவஷ்டமாசித்தியும் பத்தியுமந்தவழியைச்சாடுமோ, ஆரபாரத்தையும் போடுமோசுற்றுமானந்தநடனமாடுமோ, மாடகூடங்களெனு மனையாட்டிதருமாசை மாட்டனைவிட்டோட்டுமோ, மனமுறிந்திடையுமடியேனுமுமைநம்பினேன் வந்தணைந்தாளுதற்கே, வள்ளலிறசூல்வருவே வளருமருணிறை குணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. ௫

ஆசாபசாச வலையுள்ளகப்படுவனோவல்லது வெளிப்படுவனோ, அகிலவாழ்வென்றிடுமளற்றில்வீழ்ந்திடுவனோ வப்புறநடந்திடுவனோ காசாசைகொண்டு கதிகெதிகெட்டுநின்றிடுவனோ தியாகைகொண்டிடுவனோ கரையற்றகப்பலெனக்கலங்கிடுவனோ கரையேறிநின்றிடுவனோ, ஈசனடியல்லாதிருந்துசென்றிடுவனோ வீசனடிசென்றிடுவனோ, ஏங்கிமிகவிடையுமடியேனுமுமைநம்பினேனேக்கமறவாளுதற்கே, மாசிலாமணிமாலையுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. ௬

புதல்வரெனுமுதலைகள்பிடித்துக்கடித்துப் புசிக்கக்கொடுத்துழல்வனோ, பொல்லாதகாமக்கடற்புலாலென்னுமோர்பூனைகைப்பட்டுழல்வனோ, கதகதெனவெறியும்பணத் திமிதித்தெனதுசால்கொப்பளித்துழல்வனோ, கட்டுப்பட்டாடைகளெனும் நமன்கைவலைக்கட்டுண்டு நின்றுழல்வனோ, சதசதென்றழுகுதுற்கந்தசாக்கடையான சமுசாரமதிலுழல்வனோ, தத்தளித்திடையுமடியேனுமுமைநம்பினேன் சற்றுவந்தாளுதற்கே, மதலைபோற்கொஞ்சுகுணமுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே

வண்டாய்ப்பறந்தெழுந்திடுவனே சிற்றின்பவாரியில்விழுந்திடுவனே, மண்ணைகாபக்குமோரமுண்டிடுவனே மாயைதனைவென்றிடுவனே, பெண்டாசையென்றபேய்கொண்டுசெத்திடுவனே பேரின்பமுற்றிடுவனே, பீற்றற்றுருத்தியிற் பிரியமுற்றிடுவனே பிரியங்களற்றிடுவனே, நண்டளந்திடுநாழியாவனே குறைவினிறைநாணுழிதாவனோர், நாளெலாமிடையுமடியேனு முமைநம்பினேனென்புகூர்ந்தாளுதற்கே, மண்டுபேரின்பவொளியுள்ளநீர் பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமரு ணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. அ

என்னகமிருக்கநானெனவசப்படுவனோ யிதமகிதமதிலுறைவனே, இரவுபகலற்றவனுபூதிதனிலுறைவனேயிதமகிதமதிலுறைவனே, தன்னைமதியாதுமதிகேடுகெட்டுவனே தன்னையுமதித்திடுவனே, தாராளமாகவருணையுமுண்டிடுவனே கட்டுமருள்கொண்டிடுவனே, என்னதான் செய்வதினியென்று யேங்கிடுவனே வேதாந்தமோங்கிடுவனே, இப்படிக்கிடையுமடியேனு முமைநம்பினேனை தரித்தாளுதற்கே, மனனுதவமுத்திநிலையுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென் னிருகண்மணியே முகியித்தீனே. கூ

கோலுமன்னரசர்கைக்கோலாவனே பாவிகுருடர்கைக்கோலாவனே, கூலாயிலாதயில்லல்லாகுவென்பனே குடிகெட்டநிலையுண்பனே, வேலையதுவாய் முகம்மதுறசூலென்பனே வேலையிதுதானென்பனே, வேதவேதாந்தமெய்ஞ்ஞானவீடடைவனேவெறுவெளியினின்றிடுவனே, ஆலாவிருட்டமென்மேலாவனேவுதிரசஞ்சருகுபோலாவனே, ஆனாலுமிடையுமடியேனு முமைநம்பினேனைதரித்தாளுதற்கே, மாலார்க்குவாலாயமுள்ளநீர் பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ய

௪-வது பதிகம் முற்றிற்று ஆக பாடல்-௫௪.

ஒன்றுஞ்சமாதி யோகமிம்முறையா
மென்றருள்பிரானே யிவற்றியல்பெல்லா
மெவற்றுறுமனைசயா திசைப்படுத்திக்
தவத்தகையருள்கெனச் சரண்புகுந்திரத்தல்.

மாடியுமீராறுகலைபா யாதுபக்குவம்பண்ணிவைப்பது சமாதி பழவினையிறக்கவுஞ் சுழிமுனைதிறக்கவும் பழகிவருவதுசமாதிஓயாதகருவிகரணாதி யோய்ந்தொழியவிழியொளி கொழிப்பதுசமாதி, ஒன்றிரண்டென்றுமனமுற்றுமுளறு கலைவிட்டொளிருபடுவதுசமாதி, ஈபெருப்பாதிகடக்கத்தேடலிருந்தாமுளின் புருவதுசமாதி, என்றருள்பிரானே யடியேனுமுமைநம்பினேனினிதுவே

ளையாளுந்தற்சே, வாயுவினுமதிவேகமுள்ளநீர் பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௧

நாவினுனிதனைமடித்தந்நாளமேமோட்டிகிலே நாட்டிவைப்பது சமாதி, நவிரண்டெட்டுபெட்டாகயழிய முன்றுலாக்குவது சமாதி, ஓவியம்போலிருந்தள்ளூறுமமிர் தங்கொளொழுகவுண்பதுசமாதி, உச்சிவெளிசென்றுமொளிகண்டுமிருவிழியையு முட்குவிப்பதுசமாதி, ஏவலொடுவிலகலெனு மிருவினையுபற்றசைவிலாதிருப்பதுசமாதி, என்றருள்பிரானேயடியேனுமுமைநம்பினெனிது வேளையாளுந்தற்சே, மாவேகமனவேகமுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௨

இதயங்களித்துவருவதையுங்கொளுத்திவெளியேறிவிடுவது சமாதி, எட்டியெட்டாப்பொருளையெட்டிப்பிடிக்கவடியெட்டிவைப்பதுசமாதி, பதிபினதிபதியையவைத் ததிகதுதியோதிப் பதம்பணிகுவதுசமாதி, பரிபூரணந்தனில்வரு காரணந்தனைப்பார்த்து மகிழ்வதுசமாதி, எதுவந்துநேரினுமாறினுமிரண்டுமொன்றென்றிருப்பதுசமாதி, என்றருள்பிரானேயடியேனுமுமை நம்பினெனிதுவேளையாளுந்தற்சே, மதயானைபோத்திரமுள்ளநீர் பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறை குணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே.. ௩

வேறற்றகத்தபரிபூரணப்பேரின்ப வீடுபுகுவதுசமாதி, விரிகருணைசந்ததருநாதனடியார்களெனவேடமணிவதுசமாதி, போராடுமையற்குதக்கைக்கடந்தப்புறத்திநிற்பதுசமாதி, புகன்மறைப்பொருளைமறவார்கட்நமக்கென்று புத்திமகிழ்வதுசமாதி, ஈராறுகால்களையுமெட்டுக்கயிற்றா லிறுக்கவறிவதுசமாதி, என்றருள்பிரானே யடியேனுமுமைநம்பினெ னிதுவேளையாளுந்தற்சே, மார்பணியுமுத்தாரமுள்ளநீர் பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௪

சாதிபேதத்தையும்பாதர்போகத்தையுந் தள்ளிநிற்பதுசமாதி, சந்ததமுமொளிருமருண் ஞானவருதேசிகன் றன்னையறிவதுசமாதி, திகிலருள்கொண்டதேஜோமயத்தண்மனஞ் சேர்ந்திருப்பதுசமாதி, செத்தசவமதுபோலிருந்து செபதபமுஞ்செய்துனிற்பதுசமாதி, ஏதுமதுவானகுருநாத னிருபாதமதிலிச்சைவைப்பதுசமாதி, என்றருள்பிரானே யடியேனுமுமைநம்பினெனிது வேளையாளுந்தற்சே, மாதவர்களுக்குதவியுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறை குணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௫

அதிகப்பிரசங்கமேகுடிகொண்ட வம்பனன்பணுவுமில்லாதவம்பன், அச்சமில்லாதவம்பன் றிட்டுகிட்டுவேனியாயகாரவம்பன், கெதிகெட்டுருட்டுவம்பன்றிருட்டெருமைக்கிடாவினுமுறட்டுவம்பன், கெண்டர்க்குவண்டர்க்குமிண்டவம்பன் சண்டைகெக்கரிக்கொட்டுவம்பன், விதிகெட்டவம்பனிலைபதிவிட்டலைந்ததலைவிரிகோலமானவம்பன், விடமெலாமொழியவடியேனுமுமைநம்பினேன் விரைவில்வந்தாளுதற்கே, வதலான்விடாமலெனை யுள்ளநீர்பின்றொடர வள்ளலிரசூல்வருகவே, வளருமருணிறை குணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. ௪

சதியாயிரஞ்செய்தவம்பனல்லிதமகிதசகசமறியாதவம்பன், தந்தைதாய்தன்மனைதநோவித்தவம்பன் றராதரங்கெட்டவம்பன், பதினாயிரந்தரஞ்சொல்லினுஞ்செவியுட்படாசபிடிவாதவம்பன், பாரவான்முதலானபேருமென்பேரையும் பகரப்பயந்தவம்பன், நிதிகேடுசீவச்சவங்கள்படசங்களேநேசித்ததோஷிவம்பன், நெரடெலாம்வெருளவடியேனுமுமை நம்பினேனேயம்வைத்தாளுதற்சே, மதிதனிலுமதிகவொளியுள்ளநீர் பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வள்ருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ரு

எண்சாணுடம்பு மொருபோதுமழியாதென்ற வெண்ணமொழியாதவம்பன், எதுவந்தாலுமோராணுவிற்குநிகரொன்றிடும் கூடகள்பேசுவம்பன், கண்சாடைகண்டுவிலகாதவம்பன்காசுகாசுகாசென்றவம்பன், கல்லுமொருபோதேனு முருகுமுருகாக்கருங்கன்னெஞ்சனானவம்பன், பெண்சாதிபெண்சாதிபெண்சாதியென்றேபிதற்றுபேய்க்கொண்டவம்பன், பேயாட்டொழிக்க வடியேனுமுமைநம்பினேன் பிரியமுடனாளுதற்கே, வண்சீருமென்சீருமுள்ளநீர் பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௬

அஞ்சாதவத்தொழிறனைப்புரியும்வம்பன்மாவதிகாரியானவம்பன், ஆதரிக்காநின்றபேர்களைத்தானேயடுத்துக்கெடுத்தவம்பன் பஞ்சமாபாதகம்முதலான தீதகம்பயமுறச்செய்தவம்பன், பட்சம்வைத்தோர்தமக் கிச்சைமிகவோதிப்பணம்பறிக்கின்ற வம்பன், நஞ்சலாமொன்றாய்த்திரண்டுருவெடுத்த கெடுநாசச்சரீரவம்பன், நாயினுங்கொடியவடியேனுமுமைநம்பினேனாட்டம்வைத்தாளுதற்கே, வஞ்சனமனுக்குநஞ்சுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறை குணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௭

தையலர்களாசையெனுமையல்விடாய்கொண்டு தாகித்தலைந்தவம்பன், சாகாவரம்பெற்ற தேகத்தனெனென்தலைகெட்டுநின்றவ

ம்பன், மெய்யாகவையகத்தாரெனக்கீடென்று வீண்மதம்பேசுவம்பன் வெறிகொண்டநாய்போலும்வள்ளுவள்ளென்றியார் மேலும்விழுகின்ற வம்பன், செய்யாதசெய்கையேசெய்தவம்பன்பொய்த்த சிற்றின்பமுற்ற வம்பனை, தீயும்பயந்தவடியேனுமுமைநம்பினேன் சித்தம்வைத்தாளுதற்கே, வையமுழுதுக்குமனை வுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண் மணியேமுகியித்தீனே, ௮

கேடெலாங்கூடித்திரண்டுருக்கொண்டகுடி கேடெடுத்தவம்பன், கேட்டபேர்கண்டபேர்காதுகண்ணுவெடுக்கின்றவடிவுண்டவம்பன் நாடெலாமிவனையுநாடலாமோவென்று நகையாடலுண்டவம்பன், நாடோறுமாடுபோலோடியோடித்தின்று நாவுருசிகண்டவம்பன், மேடுமுட்டத்துருத்திக்குட்பருக்கைமிகவெட்டியேவீசுவம்பன், மெத்தவம்புற்றவடியேனுமுமைநம்பினேன் மேன்மைதந்தாளுதற்கே, மாடம்பஜம்பநடையுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண் மணியேமுகியித்தீனே. ௯

தாயாதிமசகலன்னைசுற்றங்கடம்மையுஞ் சாராதடித்தவம்பன், தானதருமங்களுக்கினதருமங்களே சாட்டிக்கொடுத்தவம்பன், பேயாய்ப்பிடித்துவெறிநாயாய்க்கடித்துப் பிடாரிபோலலையும்வம்பன், மீறுநானென்றுமுபதேசங்கள்கூறிவிலை பேசித்திரிந்தவம்பன், தூயமகுழுதுநபிபாதமலர்ச்சென்னிசூட்டறிவின்மோட்டுவம்பன், துறவெய்ததெய்தவடியேனுமுமைநம்பினேன் சொன்னபடியாளுதற்கே, மாயோகசித்திநெறியுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௰

௯-வது-பதிக-முற்றிற்று-ஆகபாடல்-௭௪.

---

பொருளிற்குவேறாய்ப் போந்தநானென்னு
மருளையவத்தை மறைக்கும்பவத்
தியங்காதுலவா தெங்குநில்லாது
வயங்காதகற்றுக வள்ளலென்றிரத்தல்.

வேதாந்தசாரமேசாரமென்றறியாது வீணடொலைத்தபாவி, மேன்மேலுமெஞ்ஞானவின்பமணுகாதபாழ்பெய்யைமெய்யென்றபாவி, சோதிப்பிரகாசச்சுயஞ்சோதியணுகத் தொழுந்துறைகளற்றபாவி, சுகநிஷ்டைபாராதவிழியெனுமுலகத்திலிரு தொல்லையோடிருந்தபாவி, சோதிலுமதடிபணிவிலாதசிரசென்றதற்குன்றைச்சுமந்தபாவி, கொடியமாபா

வியடியேனுமுமைநம்பினேன் குடியிருந்தாளுதற்கே, மாநவதபேதமிலே யுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௧

மட்டிகளினுங்கெட்டசுட்டிவால்வெட்டி பேய்மட்டைகட்டித்தபாவி, வஞ்சிமனுக்குவாரிக்கொடுத்திடவுடலைவளமாய்வளர்த்தபாவி, சட்டிவைத்துச்சட்டிவாய்க்கும்பெருந்தொப்பைசற்றும்வடியாதபாவி, சண்டாளருக்குமாசண்டாளருக்குமா சண்டாளனானபாவி, பொட்டையிபுலீசுகைக்குட்பட்டபாவியொரு போக்குநீகற்றபாவி, போதாதபாவியடியேனுமுமைநம்பினேன் பொய்மைதீர்த்தாளுதற்கே, வட்டமதிவெட்டுமுகமுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௨

நாசச்சரீரத்தைநானெனக்கொளு நாசம்பிடித்தபாவி, நாநாவிதங்கட்குமேலானபாவியானற்றவமுமற்றபாவி, கூசாதபாவிவாய்பேசாதபாவிமா கோபம்படைத்தபாவி, கொலைபாவிகொலைபாவிகொலைபாவி கோடானுகோடிகொலைசெய்தபாவி, வேசியர்களாசையினிலகலாதபாவி தீவினையுமகலாதபாவி, வீணானபாவியடியேனுமுமைநம்பினேன்மெய்மைதந்தாளுதற்கே, வாசாமகோசரத்துள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௩

பிரியாதபேரின்பவனுபூதியாசைப் பிறப்பறியாதபாவி, பிரபஞ்சவுறவைநெஞ்சமஞ்சினோர்கடம்பின்சென்றிடாதபாவி, அருமையாயறிகுறிகளத்தனையுமெற்றிநல்லறிகுறிகளற்றபாவி, அந்தகாரத்தையேபுந்தியுட்கொண்டுவெறு வஞ்ஞானியானபாவி, நரசென்மமாகிய நரர்குணங்கனவினு நாடியறியாதபாவி, நலமற்றபாவியடியேனுமுமைநம்பினேனன்புதந்தாளுதற்கே, வருகவலையேகவழி யுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௪

தேகாதியகிலப்பிரபஞ்சமதுபொய்யென்றுதேர்ந்தறியிலாதபாவி, தீபாவிதீபாவிதீபாவிதிவ்யகுணமற்றபாவி, மாகவலைகுடிகொண்டபாவிவம்பாகவே வாதாடுகின்றபாவி, மாயப்பசாசுகொண்டலைபாவிவீணாகவாழ்நாளழித்தபாவி, ஆகாதபாவியானுகாதபாவியானுர்க்குமாகாதபாவி, யளவற்றபாவியடியேனுமுமைநம்பினேனுண்டணைத்தாளுதற்கே, வாகுவழியேகவொளி யுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே.

மெய்யானபொய்யுடலைமெய்யென்றுமெய்யான மெய்யறிவுகெட்டபாவி, மெய்யானமெய்யேதுமறியாதபொய்யான மெய்யைப்படைத்தபாவி, பொய்யானதையலரை யையோவணைக்கசுக போகமோகித்தபாவி, பொய்யானபுலையானகொலையானமலைதான பொய்த்தமொழிகற்றபாவி, வையாதவையாசைவையானதீயானமாயைகுடிகொண்டபாவி, மாகொடும்பாவியடியேனுமுமைநம்பினேன் வந்திருந்தாளுதற்கே, வையவிழி மையவொளியுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௬

பசுபாசபாசவினையென்றவிரிகொண்டலைபசாசாடுகின்றபாவி, பால்பழங்கற்கண்டுசர்க்கரைகண்டுமொக்கியும் பட்டமரமானபாவி, விசனமொடுதுக்கமேகுடிகொண்டபாவிபொய் வேடந்தரித்தபாவி, வித்தகன்திருவடிதனைத்தொழுதுதொழுதழுது மெய்யருளுறாதபாவி, நிசமாகவசைபேசுவார்கள்வாய்தன்னிலே நிதமாயிருந்தபாவி, நிலையற்றபாவியடியேனுமுமைநம்பினேனேயமை வந்தாளுதற்கே வசியமனவாசிவசமுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௭

இதமகிதமென்றவினையுங்கொண்டலைந்துசிற் றின்பமேவுண்டபாவி, எண்சாணுடம்பும்வெறுநஞ்சானபாவியோ ரின்பமணையாதபாவி, பதபற்றபாவிபக்கீறுதலைமட்டை பரதேசியானபாவி, பாவிப்பிணங்களைப் பாடித்துதித்துப் பணம்பறிக்கின்றபாவி, சாதிகொடும்பாழாக்கு மதிகொடும்பாவிபொய்ச் சத்தியஞ்செய்தபாவி, சர்ப்பமிகர்பாவியடியேனுமுமைநம்பினேன் சாரிவந்தாளுதற்கே, மதினமுதலும்வாசமுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௮

கைக்குள்வெண்ணையைவைத்துநெய்க்கழுதபாவிகலை கற்றுமறிவற்றபாவி, கற்பகவிருட்சத்தினடியிலேகாஞ்சிரங் காய்தேடிநின்றபாவி, கொக்குப்பிடிக்கநாய்க்குத்தெரியுமோவென்று கொள்கைகுடிகொண்டபாவி, குருடர்களியானையைக்கண்டகதைபோலசற்குருவையறியாதபாவி, சர்க்கரைகரும்புகற்கண்டமுதிருக்கக் கசங்குடிக்கின்றபாவி, தலைகெட்டபாவியடியேனுமுமைநம்பினேன் நயவுவைத்தாளுதற்கே, மக்கநகருக்குமணமுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௯

குரசிக்குலக்கொழுந் தானமகுமூதுநபி சொள்கையறியாத பாவி, கொறடாத்தனைக்கொண்டுமோட்டினுமறிஞர்பின்கூடிநடவாதபாவி, அரிசிவிலையுலையறியுமோவென்றகதைபோல கவலைப்படைத்தபாவி, அருக்குவைத்தகூழாயினுஞ்சரிகாணிலள்ளியடைகின்றபாவி, விரிதருந்தொ

ப்பையைவிருப்பமொடுவளர்க்கமேன்மேலுமலைகின்றபாவி, விதியற்றபாவியடியேனுமுமைநம்பினேன் வேலையீதாளுதற்கே, வரிசைநபிவரிசைமிகவுள்ளனீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௰

௭ வது-பதிகமுற்றிற்று-ஆகபாடல்-௮௪.



இதற்குமுன்சொன்ன விடையூறிரண்டினாற்
பதைப்பற்றிராத பாவியுள்ளத்தினுக்
கென்செய்வேனுனென் றிடைந்திரைந்தழுவதை
யின்செய்கையாலொழித் திடுகவென்றிரத்தல்.

கனமாயைவினையென்றசனியன்பிடித்துக் கலங்கித்தவித்தழுவனோ, காலூன்றிமறைபொழிய வுங்கருணைமுகிலினங் கவியவில்லையென்றழுவனோ, அனியாயமனியாயமனியாயமென்கொடுமை யனியாயமென்றழுவனோ, ஆனாலுமென்போலுமொருபாவியகிலத்தி லாருளாரென்றழுவனோ, இனியாள்வரெவரையனேயையனேயெனவேங்கித்துடித்தழுவனோ, இங்கென்னசெய்வனடியேனுமுமைநம்பினேனிஷ்டம்வைத்தாளுதற்கே, மனமாயையற்றமன முள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௧

தந்தைதாய்முதலானபந்தங்கவன்றெனைச்சதிசெய்ததற்கழுவனோ சாதிவனாதள்ளியேசஞ்சரிக்காதமெய்த் தவக்குறைதனக்கழுவனோ, புந்திமகிழுண்டுண்டுடுத்துசிற்றின்பவனு போகந்தனக்கழுவனோ, புனிதஞானோதயப் பெருவெள்ளமென்றுதான் பொங்குமோவென்றழுவனோ எந்தவிதமாயினுமிணங்கவில்லையென்மன மிணங்கவில்லையென்றழுவனோ என்செய்வேனேழையடியேனுமுமைநம்பினேன் இதுவேளையாளுதற்கே, வந்துகுதிகொள்ளுநடை யுள்ளனீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழு மென்னிருகண் மணியே முகியித்தீனே. ௨

மாயாதவோயாவிகாரத்தினாலெனது மனதுநொந்தே யழுவனோ, வஞ்சப்ரபஞ்சத்தைநெஞ்சத்திருத்தியே மதிகெட்டினறழுவனோ, தீயனிவனின்றேசுகின்றவர்நகைக்கின்ற தீவினைதனக்கழுவனோ, சீநாயே போவென்றடித்துத்துரத்துஞ் சிறப்பினைப்பட்டழுவனோ, நாயினுங்கடைகெட்ட நாயினுங்கடைகெட்ட நாய்போலலைந்தழுவனோ, நானென்

னசெய்வனடியேனுமுமைநம்பினேன்நன்மைகூர்ந்தாளுதற்கே,வாயாத யாசையா யுள்ளனீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழு மென்னிருகண்மணியே முகியித்தீனே. ௩

பாசக்கயிற்றுவலைவீசிப்பிடிக்கின்ற பாவையர்க்கேயழுவனோ, ஆசைப்பெருக்கைப்பெருக்குமழும்பாளருக்கேயழுவனோ, அம்மம்மவென்சொல்லுவேனகிலவாழ்வென்னுமச்சினிகள்சுட்டழுவனோ, பீசேறுபிற்றற்றுருக்கிசதமென்றதைய் பேணுதற்கேயழுவனோ,பேயனென்செய்வனடியேனுமுமை நம்பினேன் பிழைபொறுத்தாளுதற்கே, மாசிலுபதேசநிலை யுள்ளனீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே. ௪

எமனைப்பழித்தமட வாரல்குலென்றபா ழிடிகிணறுவீழ்ந்தழுவனோ, யிருகொங்கையென்றதேள்கொட்டிமண்டைக்கேறியெரியுதேயென்றழுவனோ, நிமையாவிழிக்கருணைகொடுத்துத்துளைக்கவென் னெஞ்சந்துடிக்கவழுவனோ, நெகிழுங்குழன்மயிர்க்கண்ணியிற்சிக்கியதைநீக்கமுடியாதழுவனோ, தமியனுமினன்செய்வனென்றுபிரலாபித்து நின்றழுவனோ, தங்கைக்கேயிசொந்தவடியேனுமுமைநம்பினேன் சமயமீதாளுதற்கே மங்கைதயில்லாச்சுகுணமுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியே முகியித்தீனே.

ஆனந்தமானபரமானந்தமாகாரவத்தையேநினைத்தழுவனோ, அகிலமுதலானபாழாசைமாளாதவணியாயந்தனக்கழுவனோ, ஈனப்பெருங்காயமென்னதென்பதிலறுவேக்கந்தனக்கழுவனோ எனதாவியுட்பொருளைவந்துனைக்கொள்வதினி யென்றெண்ணிநின்றழுவனோ, கானலைநிகர்த்தமெய்மெய்யென்றபொய்களைக் கருதிவெறிகொண்டழுவனோ, கன்மியென்செய்வனடி யேனுமுமைநம்பினேன் கரையேற்றி யாளுதற்கே, வானுதிபூகமதிலுள்ளனீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௬

கட்டிப்பிடிக்கினுங்கைக்கடங்காமனங் கவிழ்திலையென்றழுவனோ கருவிகரணம்பாய்குவதுகண்டுகண் கலக்கங்கொண்டுநின்றழுவனோ,வெட்டவெளிதன்னிலேவிட்டகங்காரமெனைமேலிட்டதற்கழுவனோ, மெய்யாகநானெனலுநானுமெனக்குளுரும் வெட்டகந்தனக்கழுவனோ, எட்டிரண்டறியாதமூடனுயிருவினைகிடாகிநின்றழுவனோ, என்னதான்செய்வனடியேனுமுமைநம்பினேன இஷ்டம்வைத்தாளுதற்கே, மட்டினுநிஷ்டைநடுவுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே,வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௭

நேராழுமாகவென்னெஞ்சுருகிநன்னிலையினிற்கவிலையென்றழுவனே நிஷ்டைக்குமெட்டாதபேரொளிதியானத்தினேர்படவிலையென்றழுவனே காராரணங்கள்போலருள்கவுந்திடக்காண்கிலேனென்றழுவனே, கடவுளைத்தேடியிருகண்ணீர்ததும்பிக்கரைந்தென்னிலைவந்தழுவனே, மாரிபோற்பேரின்பமழைபொழிபவிலையென்று வாய்விட்டிறைந்தழுவனே, மனநைந்திடைந்தவடியேனுமுனைநம்பினேன் வாழ்வுகள் காணுதற்கே, வாராதிராதவரமுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல் வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௮

கட்டழகிதன்னையென்கண்ணிலுங்காண்கிலேன்காண்கிலேனென்றழுவனே கன்மாரிவிண்மாரிபோற்பொழியவழுவனே கைதலையில்வைத்தழுவனே, கொட்டாவிவிட்டுவிட்டேங்கியேங்கிக்கொண்டு குந்தியுட்கார்ந்தழுவனே, குறையெலாமொழியுமம்மார்க்கத்தைக்காணு துலாவியேநின்றழுவனே, எட்டாதகொம்பினி லிருக்கின்றதேனே யிறங்கிடாவென்றழுவனே, ஏதென்றுசொல்வனடியேனுமுனைநம்பினேனிச்சையுடனுணுதற்கே, வட்டமிடுமுகில்பித்தையுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண் மணியேமுகியித்தீனே. ௯

என்னசெய்யப்போகிறேனென்றுபாவிதானிரவுபகலாயழுவனே, ஏமசாமமென்றிலாதுதேம்பித்தேம்பிபெறிமூச்செறிந்தழுவனே, கன்னலமுதேசீனிகற்கண்டுசர்க்கரைக்கட்டியேயென்றழுவனே, கண்ணாட்டியானவென்கண்மணியையென்றுகாண்பனோவென்றழுவனே, நவநேயராயமகுழுதுபகநம்பியோநாளுமெநொந்தழுவனே, நைந்தொழுதுகொந்தவடியேனுமுனைநம்பினேனன்புகொண்டாளுதற்கே, மன்னுமதிகளிலுமொளியுள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௰

அ-வது-பதிகம்-முற்றிற்று- ஆகபாடல்-௬௪.



இறந்தொழிந்தற்பக மியங்கிய துன்மையின்
மறைந்தொழியாது மாறுயிருப்ப
கொன்றுவந்தன்றே வொன்றனென்றும
னின்றிடற்கருள்கென நின்றழுதிரத்தல்.

ஞானகுருநாதனற்பதம்தொழுதழுது நாடுவது மெக்காலமோ நான்மறைதனக்குமெட்டாதநாலாம்படியினுனேர்வதெக்காலமோ, ஊனோடிருந்தவுறவற்றுமுறவுற்றுவிட்டுகுவதெக்காலமோ, ஒப்புவமைசெப்பரியகர்ப்பூரதீபமெனவொன்றுவதெக்காலமோ, தானேயெனைப்

பெற்றமானேவருந்தியருட்டுருவதினியெக்காலமோ, சாவப்பிறந்தவடியேனுமுனைநம்பினேன் சமயமீதாளுதற்கே, வானமெல்லாக்கிளைமையுள்ளீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௧

வேடிக்கையும்பகட்டிப்பிலுசகுந்சொகுசும் விட்டொழிவதெக்காலமோ, வீணுரக்கங்களுமுணுரக்கங்களும்போறுவதெக்காலமோ தாடிமீசைகளைரைத்துந்தலைமிலாநறவுசையென்பதெக்காலமோ, சண்டைநின்றிடுவதும்மண்டைபிண்டுடைவதுஞ்சள்ளெனபதெக்காலமோ, சாடாதுசமநிலையினின்றுசமரசமீது சாகூர்வதெக்காலமோ, சாவப்பிறந்தவடியேனுமுனைநம்பினேன் சமயமீதாளுதற்கே, வாடிக்கையாய்க்கருணையுள்ளீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௨

சொக்கலரிபசுகவாரியமிழ்துண்டொடுங்கித் துடிப்பொழிவதெக்காலமோ, சுந்தரச்சோதிமணிமாலையணிமாபனைத்தொழுவதினியெக்காலமோ, நல்லநடனம்புரிந்தாடுகருணாகரனடனம்புரிவதெக்காலமோ, நாடிவலுவாகப்பிடித்திருந்தெந்தனையுநடியென்பதெக்காலமோ, சுல்லிக்குணங்கெட்டபுல்லர்களைவிட்டுக் களிப்பதினியெக்காலமோ, சாவப்பிறந்தவடியேனுமுனைநம்பினேன் சமயமீதாளுதற்கே, வல்லிருளைவெல்லுமொழியுள்ளீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௩

நயமேயுணர்ந்தறிவின்மயமேநிறைந்தபொருளுணர்வதெக்காலமோ, நல்லறிஞர்பின்சாடியில்லுறவுபின்சோடநாள்வருவதெக்காலமோ பயமேதுமறைந்தவிருதயமேசெறிந்தவினைபாழாவதெக்காலமோ, பாடைதனிலேறுமுன்னெளித்தோடிவோடியுட்பதிபுகுவதெக்காலமோ, தயவுவைத்தெனையாண்டதேவரீர்பாதமலர் தனையணைவதெக்காலமோ, சாவப்பிறந்தவடியேனுமுனைநம்பினேன் சமயமீதாளுதற்கே, மயிலாடல்போனடனமுள்ளீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௪

ஈனக்கரும்புகழ்க்கூடானதேகவுறவேகுவதுமெக்காலமோ, இன்றோர்நாளைக்கிருப்பதும்பொய்யென்பதெய்துவதுமெக்காலமோ, யானெனப்பட்டகமேறுமுடலும்சொட்டலொட்டையென்றறிவதினியெக்காலமோ, ஆனந்தமானபொருளானந்தமாயடிமை யாவதினியெக்காலமோ தானுமேனதானுமேனென்றுநான் றூறுவதெக்காலமோ, சாவப்பிறந்தவடியேனுமுனைநம்பினேன்சமயமீதாளுதற்கே, வானினுங்கருணைவானுள்ளீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௫

கடன்மடைதிறந்ததென வருண்மடைதிறந்தடிமை கண்குளிர்வதெக்காலமோ. கங்கற்றபேரின்பவெள்ளத்தின்மூழ்கியென் கலிதீர்வதெக்காலமோ, உடல்குழையநெக்குருகிவிழிநீருமாறாக வூறுவதுமெக்காலமோ, உள்ளுளேபற்றியெரியுந்தீயமர்ந்துள்ளமுட்குளிர்வதெக்காலமோ சடைவனோமிடைகொண்டு மிடைவனோதேவரீர் தாம்வருவதெக்காலமோ, சாவப்பிறந்தவடியேனு முமைநம்பினேன் சமயமீதாளுதற்கே, வடிவேதுமற்றவடிவுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண் மணியேமுகியித்தீனே. ௬

ஈனமின்ஞானோதயத்தையென்கண்கண்டிருப்பதினியெக்காலமோ ஏறுதமோட்டிக்குழுத்துலையினீரிறைத் திளையாததெக்காலமோ, கோனாகுருநாதனும்மடிமைநெஞ்சினிற்குடிகொள்வதெக்காலமோ, குறைவற்றதேஜோமயச்செல்வம்வந்துகுதிகொள்வதுவுமெக்காலமோ, தானேமகிழ்ச்சிபெற்றேனேயென்றன்னைநீர் தழுவுவதுமெக்காலமோ, சாவப்பிறந்தவடியேனுமுமைநம்பினேன் சமயமீதாளுதற்கே, வானோர்வணங்குநெறியுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண் மணியேமுகியித்தீனே. ௭

இலைசருகுகந்தமூலங்களாலென்கும்பியெரியொழிவதெக்காலமோ என்பெலாநெக்குருகிநிற்குநிலைசொக்கிநின் றிணைபுருவதெக்காலமோ, உலையிட்டமெழுகெனப் பாழானகன்னெஞ்ச முருகுவதுமெக்காலமோ, ஓடியலைசிந்தையுமாடியகறங்குபோ லுழலாததெக்காலமோ, சலியாதுகான்மலைகடன்மீதுறைந்தருட் டிணையண்ணுவதெக்காலமோ, சாவப்பிறந்தவடியேனுமுமைநம்பினேன் சமயமீதாளுதற்கே, வலியுமனைதன்னைநிகருள்ளநீர்பின்றொடரவள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண் மணியேமுகியித்தீனே. ௮

ஏதமில்லாதகுருவடிசென்னிமீதெடுத் தேந்துவதுமெக்காலமோ, ஏழையடியேனருளிலாமலுளருந்தமிழ்க்கிரங்குவதுமெக்காலமோ, தீதுமதபேதங்களற்றுமேயெங்குமிது செல்வதுவுமெக்காலமோ, சிறியார்மணற்சோற்றறநிகரிதென்றறிஞர்பிழை செப்பாததெக்காலமோ, சாதிவணையற்றகுருநாதனேமுத்திநிலை தருவதினியெக்காலமோ, சாவப்பிறந்தவடியேனுமுமைநம்பினேன் சமயமீதாளுதற்கே, வாதசமயங்கடறவுள்ளநீர்பின்றொடர வள்ளலிறசூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண்மணியேமுகியித்தீனே. ௯

மக்கநகராளும்முகம்மதிறசூல்பாதம் வருவதினியெக்காலமோ, வந்தெனதுசிந்தைகுடி கொண்டுமகிழுண்டடிமை வாழ்வதுவுமெக்காலமோ, எக்காலமெந்தையேதேவரீர்கூடவந்தெனையாள்வதெக்காலமோ, எக்காலமெக்காலமெக்காலமென்றழுவதெக்காலமோ, தக்கநிலைதன்மீ

தூசொக்கியமிக்க்ருமிருசாதருள்வகுக்காலமோ, சாவட்பிறக்கவைடியே
னுமுமைநம்பினேன் சபையீதாளுதற்க, மக்கிய பலகோடியுள்ளநீர்பி
ன்றொடர வள்ளலிருகூலவருகவே, வளருமருணிறை குணங்குடிவாழு
மென்னிருகண் மணியேமுகியத்தீனே.

௯ வது பதிகமுற்றிற்று ஆக பாடல் ௯௰

அளவிடற்கரிய வரியனசாட்சி
வுளபலசமுகத்தி லேறு மின்மகிமையைப்
பலகோடிசிட்டர் பலரினுமொருகோடி
நிலனுறுமடியேனு கோபெறவருள்செனை
முன்னிலைக்குருவா முகியித்தீனென்
றந்நிலைநோக்கித் தாழ்ந்துவந்திரத்தல்

ஏகறட்பில்ஆலமினருட்களான வேழுபங்காளர்கோடி, எங்கள்மகுபூமீன்கமௌருங்கோடி ஆரிபீனென்டிரண்டாரியகோடி, சேகுமௌலவிமார்கண்முறைமுறையாகவிறசாது தேடிவருவார்கள்கோடி, இவ்வியகுணநிலையுல மாக்களெதிர்கொண்டிதனை நீயென்றுணருவர்கோடி, மெகமழியாநகீற் பாசம்படைத்தமா இத்தர்களனந்தகோடி, தேவரீர் சீடரடியேனுமுமைநம்பினேன் றீட்சைதந்தாளுதற்கே, மாகோடிசீடர்கள் முள்ளநீர்பின்றொடர வள்ளலிருகூலவருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண் மணியேமுகியித்தீனே. ௧

அருள்மொழியுநானவா நந்தநடனம்புரிந் தாடிவருவார்கள்கோடி, அஷ்டாங்கயோகநிஷ்டானு யோகியர்களேயனவற்றகோடிகோடி, நாதொழுந்தவராஜசிங்கங்கள்கோடியெந்நாளுமுள்ளோர்கள்கோடி, நாசச்சரீரத்தைநேசித்தபாசத்தை நாசமாக்கினவர்கோடி, சிரம்விரித்தவர்கோடி கரம்விரித்தவர்கோடி சினமறுத்தவர்கள்கோடி, தேவரீர்சீடரடியேனுமுமைநம்பினேன் றீட்சைதந்தாளுதற்கே, மருவுற்றமணிமருடமுள்ளநீர்பின்றொடர வள்ளலிருகூல்வருகவே, வளருமருணிறைகுணங்குடிவாழுமென்னிருகண் மணியேமுகியித்தீனே. ௨

சதியாசைகொண்டதிகத்திடேசிகின்றறிய கைகட்டிநிற்பர்கோடி, கனிவால்திறந்தருள்மொழிந்திடவேரமென்று கண்மாரிபொழிவர்கோடி, பதியாசைமுந்திபிபபாழாசையற்றுருப்பாழேந்திருர்கள்கோடி, பத்தினைராக்கியமொழுத்திருழிசென்றசீடர்தர்கோடானுகோடி, வைய்வத்தெரிந் தைகயர்களோலவகுக்குங்கோடிசெல் பயானைந்தங்கோடி, தேவ

மனத்திற்குச்சுகந்துணை தழுவித்தரித்திடஆட்கொண்

டாளாக்கியருளவேண்டும்.

சுந்தரச்சோதிமணிமார்போடணைத்துச்சுகந்தந்தனருள்புரியவுஞ், சொந்தவடியேன்சிந்தைநொந்திடாவண்ணமே துணையுநின்றருள்புரியவுஞ்- சந்திரோதயமெனச்சிந்துமொளிதந்துகைதழுவிநின்றருள்புரியவும்- தளதளென்றவிர்தருசகச்சோதிபாவித் தரித்திடற்கருள்புரியவும், அந்தரத்துலவுகமனக் குளிகையொன்றளித்தாட்கொண்டனருள்புரியவும், அம்பிகைபதம்பணியுமாளாகவும்மெனையு மாளாக்கியருள்புரியவும், வந்தனங்கைக்கொளுந்தவராஜசிங்கமே வரவேண்டும்மென்றனருகே,மாகுணங்குடி வாழுமென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே.

அ-வது காட்சிநிலைப்பத்துமுற்றிற்று-ஆகபாடல்-௱௮அ.



தோற்றியகாட்சியிற் சயத்தினைப்பற்றி
ஏற்றியேற்றி யிடம்வலமுன்பின்
இயங்காசோங்கி யெழுமனந்தன்னினை
வயங்காத்தோன்றி யுண்மையிற்றிகழ
நிறுத்திவம்மன நிலைதிரியாமற்
குறிக்கபொருளொடு கொளுக்தறியாமனம்
சான்னும்பாங்கி னிம்முறைபருள்கவென்
றுன்னியுன்னி யுவந்திரந்துயர்த்தது

## ஒன்பதாம் அதிகாரம் தியானநிலை.



மனமோகமதைநாளும்நாட்டிவைத்தவிழாமலவிழ்ந்து

தேனொழுகச்சிறப்பிடவரவேண்டும்.

நவகண்டயோகமே நான்கொண்ட மோகமதை நாளுமெற்கருள்புரியவும்,நாலதனையோட்டிவிட்டங்நாளமாட்டிநிலை நாட்டிவைத்தருள்புரியவும்,அவிழுமொன்பதுவாயிலுங்கட்டவுங்கட்டுமவிழாமலருள்புரியவும் அவயவாதிகளுநவ கண்டமாய்விழாதவிழ்ந்திடற்கருள்புரியவுந், திவலையொன்றுயினும் புன்னுனியின்மணியெனத் தேனொழுகவருள்புரியவுஞ் சிற்றூறலூட்டவுஞ் சித்தாந்தமூத்திச் சிறப்பிட்டுன்னருள்புரியவும்,மௌனிமணியானமெய்த் தவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே, மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே.

மனம்பெரும்பாசையொன்றில் நிர்த்தூளிபண்ணிக்கடந்து
கைக்கொண்டேன்றியொன்றுக்குளொன்றாகவரவேண்டும்.

பாலமுந்தாண்டியப்பானடக்கப்பெரும் பாசையொன்றருள்புரியவும், பாருக்களோவனந்தங்களைநிர்த்தூளி பண்ணிவிட்டருள்புரியவுங், காலாலடர்ந்துசமர்செய்துநலமாறுங் கடந்திடற்கருள்புரியவுங், கண்டத்தைவென்றுகாயாபுரிக்கோட்டையென்கைபடற்கருள்புரியவும், ஓலமிட்டோங்காரவுனைதக்கம்பமங்கூன்றிடற்கருள்புரியவும், ஓசைமணிமண்டபஞ்சென்றுநின்றொன்றுக்கு ளொன்றாகவருள்புரியவும், வாலியம்மூகிருமுள்தவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே, மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே.

மனமூட்புகவொடுங்கித் தூங்கிடக்கோபிக்கத்
தகைதீர்ந்திடயேற்றிடவரவேண்டும்.

ஓங்காரமதுகொண் டெழும்பிரணவப்பதியி னுட்புகற்கருள்புரியவும், உள்ளுறையினுள்ளேயோர்மூலையிற்சென்றங் கொடுங்கிடற்கருள்புரியவுந், தூங்காது தூங்குசிவயோகநித்திரைவந்து தூங்கிடற்கருள்புரியவுஞ், சுடருண்டகற்பூர வுண்டைபோனின்றுடற்சோபிக்கவருள்புரியவுந், தேங்காத்திருக்கருணை வெள்ளம்படிந்துதகை தீர்ந்திடக்கருள்புரியவுந், தேறுதசிந்தையுந்தேறவுமெனைக்கடைத்தேற்றிவிட்டருள்புரியவும், வாங்காவினைசையொடுதவராஜசிங்கமேவரவேண்டுமென்றனருகே, மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே.

மனமங்கங்கென்றுள்ளடக்கிப்பக்குவம்பண்ணி அமிர்தபானந்
திருத்தந்தீரவருளவரவேண்டும்.

ஆயபன்னிருகலையுநாயாறுதங்கவும்மங்கங்கென்றருள்புரியவும், அங்குசிங்கென்றனைமம் பத்தோரெழுத்துள்ளடங்கென்றனைருள்புரியவும், பாயவும்வாசிகலைதேயவும்பக்குவம பண்ணிவிட்டருள்புரியவும், பாலூறவுஞ்சுழினைமேலேறவும்மமிர்த பானமேற்கருள்புரியவும், தீயைப்பொருத்திளவேனையத்திருக்கித்திருத்திவைத்தருள்புரியவுந், தேறற்றெளிக்கவுஞ் சோரப்பழிக்கவுந் தீரமொன்றருள்புரியவும், மாயமைக்காயவுந் தவராஜசிங்கமேவரவேண்டுமென்றனருகே, மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே.

மனம்வழிமருவச் சமர்செய்யத்தம்மனம் அடைத்துச்
சரணமடையவரவேண்டும்.

வங்குவங்கென்றரீங்காரமுடனேகமேல் வழிவிட்டெனருள்புரியவும் வாசிதனிமேலற்றியெனை மாசற்றபரவெளியின்மருவவைத்தருள்புரியவுஞ், சங்குசிங்கென்றங்குசண்டமாருதமெனச் சமர்செய்யவருள்புரியவுஞ், சம்பனங் கும்பித்திரேசிக்கவாயுவுட்டப்பனமருள்புரியவும், அங்கடங்குண

டவிர்க்கடைந் தென்சடமடைத்து வைத்தருள் புரியவும், அம்மைகு ண்டலிபாதமாசரித்துச்சரணமடைந்திடற்கருள் புரியவும், மங்காதசங்க மேதவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே, மாகுணங்குடிவாழுமெ ன்னகத்தீசனே மௌனதேசிகநாதனே.

மனத்திரஞ்சின்மயமெய்ஞ்ஞான [illegible]

தொடருளவரவேண்டும்.

செத்தாலும்வைத்தடிபின்வாங்காதமனமே [illegible] புரியவும்,சிற்பரவெளிக்கூடுசெல்லவுஞ்சொல்லரிய சின்மயருள்புரியவும், ஏகநாதமுத்திநெறியேற்றவுமெற்றவையு மெய்ஞ்ஞானருள்புரியவும்,ஏகவுருவாகி நின்றெங்கு நிறைகின்றபொருளை யுணரவருள் புரியவுஞ், சுத்தபடிகச் சுயஞ்சோதிபரவிமுச் சுடர்தொழுந்தருள்டருளபுரியவுஞ், சொக்குமதிமோ கமுகலாரியமுதூட்டவுஞ்சொந்தக்கோடருளபுரியவும், வற்றாத செல்வ மேதவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே, மாகுணங்குடிவாழுமெ ன்னகத்தீசனே மௌனதேசிகநாதனே.

மனத்திரிஷ்டம்வைத்தென்னை யெற்காய்ந்ததிலதர்க்குச்

சித்தம்வைத்துச்செய்யு நலலருள்புரியவரவேண்டும்,

இதமாகவேயடிமைபதமாம்பொருட்டாகயிஷ்டம்வைத்தருள்புரியவும்,எல்லாமதாயேதுமில்லாதுமாயிலன்றவென்னையெற்கருள் புரியவும், அருவேயதானவோரருமறைப்பொருளையாரந்திடற்கருள்புரியவும்,அறிவதற்கரியவரிவாகாசமானவுன்னையறியுதற்கருள்புரியவுஞ்,சிந்தையுமிந்தைத்தையுஞ் சிந்தையாதிருக்கவுஞ்,சித்தமலைத்தருளபுரியவும், சேவடிகொடுத்திங்காயடியனுக்குகவி செய்யநல்லருள்புரியவும், தமற்றமதமுற்றுதவராஜசிங்கமேவரவேண்டுமென்றனருகே மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே.

மனைத்தாக்கித் துணிந்தெடுத்திருந்து.

நிலைநெக்குருகவரவேண்டும்.

தொலையாப்பவக்கடற்றொலைத்துமக்கரையிலென்னை தூக்கிவிட்டருள் புரியவும்-தொல்லைதரு தொல்லுலகைவெல்லவுந்துறவிற்றுணிந்திடற்கருள்புரியவும்-இலையம்புலர்ந்தசருகுந்தும்பியெரிவிற்றிருடற்கருளபுரியவும் இந்தலையினூற்றுவிமுக்க லைக்கப்பா லிருக்குமுனையருள்புரியவும்-நிலையற்றவிதயத்தைநிலையாத்திருத்தூநனிலையமெனையருள்புரியவும் - நிலைசொக்கியநிற்பதுநிற்கவும்நெக்குருகவருள்புரியவும்-மலைவெல்லாந்தீர்க்கவுந்தவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே-மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே

மனக்கருத்துக்கற்பித் தொழிந்தொதுங்கி

நடந்துநானெனவரவேண்டும்.

கானகவிலங்கினின்மாகும்வைராக்கியக் கருத்தொன்றனருள்புரியவும்-காடுவீடாகவும்வீடுகாடாகவும்கற்பித்துனருள்புரியவும்-ஊனிறைந்தோருருவெடுத்தகாயத்துற வொழிந்திடவுனருள்புரியவும்-உண்டுடுத்துப்பூணுமுதலகநடையெனைவிட்டொதுங்கிடற்கருள்புரியவும்-ஞானேதயங்கண்டுமோனுபிமானம் நடந்திடற்கருள்புரியம்-நானென்றதற்குநானுனுக்கும்வண்ணநீநானென்றதருள்புரியவுமவானுகுடிவாழுமென்னகத்தீசனே மௌனதேசிகனே. ௯

மனத்திடனஞ்சந்நிதியிற் சென்றுதிறந்து

வசம்வளர்ந்தேறவரவேண்டும்

நாசிநடுவணைநட்டநடுவினின்றுல்லாசநடனமிடவருள்புரியவும்-நாதநாதாந்தமுமுழங்குமோர்தெய்வசந்நிதியில்விட்டருள்புரியவும்-தேசுதருமோசைமணி மாமண்டபத்தினுட்சென்றிடற்கருள்புரியவும்-திரையைக்கடந்தங்கவுள்ளறையைத் திறந்துகந்தருள்புரியவும்-வாசங்கொழித்தகமலாசனத்தையுமென் வசங்கொடுத்தருள்புரியவும்-வற்றாதசெல்வங்களைத்தேசகாலமும்வளர்ந் தேறவருள்புரியவும்-மாசேதுமற்றமெய்தவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே-மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனேமௌனதேசிகநாதனே. ௰

௯-வது நியானநிலைப்பத்துமுற்றிற்று. ஆகபாடல், உ௱௮

---

ஒன்றியத்தனையொன்றிற்றுறுகுணம்
இன்றித்தானுந்தன்பெயரின்றிச்
சேர்ந்துஞ்சேராதிருந்தவுண்மையோ
டார்ந்துமதுவுமாகாதாகா
ஆங்கனங்குறித்தலம்மூகற்பொருளொடு
தான்பிறனுகத்தகையதுசமாதி
ஆகுமென்றவந்நிலையருள்கவென்
றேகமாகியிரந்திரந்துயர்த்தது

பத்தாம் அதிகாரம் சமாதிநிலை.

மனங்கூடுகொள்ளாமலடங்கிஒதுங்கி

யொழிதல்வரவேண்டும்.

கூடுவிட்டுக்காடுபோயுங்கருக்குருவிலுறையவருள்புரியவும், கொல்லனுலைமேனின்று கூத்தாடுகுறளிகுதி கொள்ளாமலருள்புரியவும், ஆடுநற்குண்டலிப் பாம்புமெய்ப்பற்றினு ளடங்கிடற் கருள்புரியவும்

அஞ்சாதவஞ்சபுல வேடர்களுமடியனேற் கஞ்சிடற்கருள்புரியவும்-ஓடியுழல்சிந்தையுங்கணமேனுமொன்றொடுங்கிடற்கருள புரியவும்- ஓவியம்போலவே சும்மாவிருப்பமற் றொழிதற்குனருள்புரியவும்- வாடுதலறிந்துமெய்த்தவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே - மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே. ௧

மனந்திகழ்ந்து தீயிற்சரிபடச்சமஸ்தமும்

ஆட்கொண்டடக்கவரவேண்டும்.

தீபம்பொருந்துகற்பூரமெனவுடலந்திகழ்ந்திடற்கருள்புரியவும்- தீயிலிட்டென்னைக்கருக்குமுன்பெணைகந் தீயிலிட்டருள்புரியவும் - சாபங்கடூராச்சமாதிநிறைவேறிச்சரிப்படற்கருள புரியவும்- தடையறாதசவுகற்பகமாயிருந்தே சமஸ்தமுமருள்புரியவும் - ஆபத்தையுமபடிமைபாபத்தையுங்கொலைத்தாட்கொண்டுனருள்புரியவும்-ஆங்காரமெல்லாமடக்கியுன்கைக்குள் ளடக்கிவைத்தருள்புரியவும்-மாபதவிபோடுமெய்த்தவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே - மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே. ௨

மனத்தின்மத்துவந்தான்சாகநாள்

வருமுன் சித்திசீக்கிரமருளவரவேண்டும்.

நான்செத்திருந்துலகமுழுதுமரசாளுமோர்தத்துவம்மருள்புரியவுந் நான்சாகவும்மருந்துண்பாரியான்றனைசாகவருள்புரியவும்-நான்சாமுனுன்சாகநாடினேனுன்சாமுனுன்சாகவருள்புரியவும் - நான்வருமுனுன்சாகநாள்வந்துநான்சாகநாள்வருமுனருள்புரியவுந் - தீஞ்சியிருபிடிசாம்பலாகவுந்தானுனை சித்தியேற்கருள்புரியவுந்- தேகநிலையல்லவேதிருவருளிரங்கிமாச்சீக்கிரமருளபுரியவும-வாஞ்சாலையானமெய்த்தவராஜசிங்கமேவரவேண்டுமென்றனருகே -மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே. ௩

மனங்கரைதத்தக்கவிழ்ந்துவிளையாடவீடுபுக

எண்ணமின்புற வரவேண்டும்.

கண்ணாறுவிண்ணாறெனப்பொங்கவுங்கங்கு கரைசத்தவருள்புரியவுங் - கருணாசமுத்திரம்பரவிவந்தென்னைக்கவிழ்ந்திடற்கருள்புரியவும். விண்ணோடர்போற்றிசெய்யணாவுமென்கூடவிளையாடவருள்புரியவும்-வேதவேதாந்தமெல்லாம்விட்டுநட்டநடு வீடுபுகவருள்புரியவும்- எணணரிய ஞானவானந்தமோனத்தந்திணர்ந்தரற்கருள்புரியவும்-ஏகதத்துவசுரூபத்தைபோதித்தவடிமையின்புறற்கருள்புரியவும்-பண்ணோளிரவிணாலுவதவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே-மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே. ௪

மனவெண்ணமிரங்கித் தீக்ஷைசெய்வித்

தொடுங்கிறயுங்கிடவரவேண்டும்.

இன்றுளோர்களையுமிருப்பரென்றெண்ணாக வெண்ணமொன்றருள்புரியவும்-இந்தவடியானுனது சொந்தவடியானென விரங்கினல்லருள்புரியவுந்-தென்றிசைக்கயிலாசமரம்பொதிகைவாசனே தீக்ஷைதந்தருள்புரியவும்-தேசிகசிகாமணியனேயடிமையென்படச்செய்வித்துனருள்புரியவும்-ஒன்றாக்குளொன்றானவொன்றுக்குளொன்றுயொடுங்கிடற்கருள்புரியவும்-உள்ளுக்குளுள்ளாகியுள்ளுக்குளுள்ளே யுடைந்திடற்கருள்புரியவும்-மன்றிலென்றுந்தொழுந்தவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே. ௫

மனமுனையே தெளிவுணணின்றுமறந்தடாதுவாய்த்திட

நானாகநானறிய வரவேண்டும்.

ஊனானகாயமுயிர்போமுனடியேனுமுனையேதொழற்கருள்புரியவும்-உயிருக்குளுயிரா யுறைந்தநீயெனதுமெற் குண்ணின்றுலருள்புரியவும்-வானாகிபூதலய மானபெருமானெனை மறந்திடற்கருள்புரியவும்-வாக்குமனமணுகாதபூரணந்தானாகவாய்த்திடற்கருள்புரியவும்-நானாகநின்று நானாகவருள்புரியவும்-நான்மறையுமறியாதநான்மறையிலுட்பொருளைநானறியவருள்புரியவும் -மானனைவிரைந்துமெய்த்தவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே-மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனேமௌனதேசிகநாதனே. ௬

மனமடர்ந்துபகாந்திதென்றிருந்திட

மதமண்ணாகவரவேண்டும்.

அதிமோகமாகிமெய்ஞ்ஞானவானந்தந் தடர்ந்தேறவருள்புரியவும்-அங்கிங்கெனாமலெங்கெங்குமதுவானதெத்து வதுபகர்ந்தருள்புரியவும் இதயங்கணின்றுமிகயங்களறிதற்கறியதிதென்றனருள்புரியவும் -ஏகமாகியபராபரமுமென்பரமாயிருந்திடற்கருள்புரியவும் மமரிமத்தளையுமற்றமதமுற்றியானுமும்மதமாகவருள்புரியவும்- மனமயக்கந்தரும்மென்மயக்கம் வெறு மண்ணாகவருள்புரியவும்-மதிமுகத்தழகனேதவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே-மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே மௌனதேசிகநாதனே ௭

மனமையலணைகால்பாலக்காத்துப்பரிசப்

பரமாடவரவேண்டும்.

அடியனேனுய்யவுமாதரவுசெய்யவு மையமற்றருள்புரியவும் -அன்புமழைசொரியமாருட்பெருகிவந்துமற்றனேதந்துவருள்புரியவுங்கடலின்மடைபோலுமென்கண்மடைதிறக்கவுங் கால்பாயவருள்புரியவுங் கதியானபூமியைப்பயிரேற்றியதைப்பாது காத்துநின்றருள்புரியவும்-படிபா

இயங்குபற்றுமெனும்முழுதுமென் பாரிசக்கருள்புரியவும்பாசமற்றிடவு பநன்னேசமுற்றடிமைப் பரமாடவருள்புரியவும்-மடமடெனநடனமிடுத வராஜசிங்கமே வரவெண்டுமென்றனருகே-மாகுணங்குடிவாழுமென்ன கத்தீசனே மௌனதேசிகநாதனே. ௮

பரமன்பறிவுவீறுவிடுபதம்பரமடைய

என்னையாதரித்தருள வரவேண்டும்

அகடமுறுசாமர்த்திய மெல்லாமறந்தடிமை யன்படையவருள்புரியவும்-அதிப்ரசங்கங்க ளெல்லாமறந்தடிமை யறிவடையவருள்புரியவும் வெருளிவிளையாட்டு முதலெல்லாமறந்தடிமை வீரடையவருள்புரியவும் வேடிக்கைபொசுபகட்டெல்லாமறந்தடிமைவீடடையவருள்புரியவும்-பகடிபரிகாசங்களெல்லாமறந்தடிமை பதமடையவருள்புரியவும்-பத்தர்குறிக்கனே சித்தபரிசுத்தனே பதமருளவருள்புரியவும்-பகுடங்கரித்தமெய்த்தவராஜசிங்கமே வரவேண்டுமென்றனருகே-மாகுணங்குடிவாழுமென்ன கத்தீசனே மௌனதேசிகநாதனே. ௯

மனம்போகாமற்புணருதற்குச்செழுஞ்சாரல்தினைத்தந்து

நான்சாரநாணுகவரவேண்டும்.

பூஞ்சோலைவாழுமோனனெனவுள்வீணினுள் போகாமலருள்புரியவும்-பொற்றாமரைக்குளத்த வளையாகாதுனை புணருதற்கருள்புரியவும்-தேஞ்சாறுபாஞ்சாறுபாயுநின்பொதிகைச் செழுஞ்சாரலருள்புரியவும்-இவ்வியமாமதுரந்திரண்டரதியமிர்தந்தினந்தந்துனருள்புரியவும்-நான்சாமுநான்செத்துநாடோறுமுன்சமுக நாஞ்சாரவருளபுரியவும் -நாதமும் வேதமும் நாதநாதாந்தமும் நாணுகவருள்புரியவுவாஞ்சித்தலோடுமெய்த்தவராஜசிங்கமே வரவேண்டுமென்றருகே-மாகுணங்குடிவாழுமென்ன கத்தீசனே மௌனதேசிகநாதனே. ௰

௰-வது-சமாதிநிலைப்பத்து-முற்றிற்று

நேரிசையாசிரியப்பா.

இவ்வகையெல்லா மியந்தும்பயன்கொளும்
அவ்வகையெவர்க்கே யினும்விதியருள்
அருளுவதாயி னவரேயுலகெலாந்
தெருளுமூர்த்தித் திருப்பொருளென்ப
நல்வழிதேடு நர்கால்
செல்வழிபக்தே துணிந்துகொளீரே.

—oo:o:oo—

அகத்தீசர்சதகப்பதிகமபத்து-முற்றுப்பெற்றது

ஆக-திருப்பாடல்-உ௱௰அ-

## அறுபத்துநாலடி ஆசிரியவிருத்தம்.

---

வெட்டவெட்டத்தளிர்கள் விட்டுப்படர்ந்தடரும்
  விசுவாசாடவியெனும்
வினையென்றபெருமா வனக்கானகக்காடு
  வெட்டிநிர்தூளி பண்ணி
வெகுளிகளெனும்டல பாட்டுமுட்காடெல்லாம்
  வேரோடறப்பிடுங்கி
விரிகருணைவீரகண் டாமணியணிந்துதுணி
  வீரவாயுதமணிந்து
வெற்றிகொண்டெழுமகங் காரவெங்கட்புலியை
  வேட்டையாடித்துணிந்து
வெட்கமொடுதுக்கமும் வெருட்சியுமருட்சியும்
  வெருண்டோடவருவிராக
வெஞ்சினமெனுங்கொடிய துஷ்டமிருகங்களும்
  வெட்டிவாலெடுத்தெடுத்து
வீறவிட்டலறியொன் றோடொன்றுசேராமல்
  வெருவியேகிடவடித்து
வெல்லரியமாமாயை யெனுமலைப்பாம்பினை
  விவேகமெனுமண்டாவினால்
வெட்டிப்பிளந்தபின் மின்னுகரணக்கோடு
  விருந்தோடுகருவேரை
மீறியவிசாரமெனு மண்வெட்டிகொடுவெட்டி
  மேட்டிமைகளென்னுமரமும்
வெட்டுண்டமாறோடு முட்களுஞ்சேர்த்ததின்
  மெய்த்தவக்கனலைமூட்டி
விண்டலமுமண்டலமு மொன்றாகிநின்றபெரு
  வெளிவாயுவதனையூடு
மெய்யானவடவன லெனும்சுடர்பரந்தபுன்
  விளிமாயையெனுமிருளெலாம்
விரிகதிர்வரக்கண்ட பனியின்முகமென்னவழி
  விட்டுவெளிவாங்கியேங்க
வெட்டியைக்கட்டிவழி வெட்டிப்பரிக்கின்ற
  வினையறக்காடுவெட்டி
சுட்டபிணகந்தைகுண மென்றகற்பாரையைச்
  சுழியென்னுமுளியினாலே
சொச்சமறவெட்டிப் பிடுங்கியிடைபிங்கலைச்
  சூட்சியென்னுஞ்சகட்டிற்

றாக்கினைத்தேற்றியே தொந்தங்களென்னுமொரு
  தோல்வடக்கயிறுகட்டித்
துட்டத்துடுக்கெனுங் காமாட்டியாட்களுந்
  தோல்வடந்தொட்டிழுக்கத்
தூயமெய்ஞ்ஞானவை ராக்கியக்கசையிற்
  றொண்டுசெய்யென்றடித்துத்
தூராசமிடியெனுந் தொல்லைப்பெருங்கேணி
  தூர்க்கவுதனையிரப்பிச்
சொற்பிரணவச்சொரூப நிச்சயக்கருமுகில்
  சூழ்ந்துதங்க ளூன்றியே
சுற்றிக்கவிந்துகொண் டானந்தமழைமாரி
  சோராமலேபொழிந்து
சொல்லரியநெஞ்சக மெனும்பூமிசுத்தவெளி
  யாகவச்சுத்திருக்கித்
துய்யசதுர்வேதத்தை நால்வரப்பாக்கியே
  துறவெனுங்கிடைமறித்துச்
சுருதிமுடிவென்னு மறிவுழவுதற்கான
  சூக்கிரமெனுங்கலப்பை
துன்பவின்பங்களெனப இரண்டுமாடாய்ச்
  சுருக்கிலார்பூட்டியிதமாய்த்
துள்ளிக்குதித்தெடுத் தேறியேபோகின்ற
  துடியடக்கின்றதடமாய்த்
தூலமொடுசூக்குமத் தாசையுநிராசையாய்த்
  தொந்தமிர்த்தொந்தமாகிச்
சோதிமயமாயென்ற வித்தகப்பண்ணையா
  ரெட்டிதயமேழியதனைச்
சொன்னபடிவந்திடக் கௌரிகுண்டலியெனுஞ்
  சுழிமுனைத்தாரெடுத்துப்
பட்டும்படாதுவை திடைதரிசிலாதுழுது
  பல்வருணபேதமென்னும்
பாவிசச்சாதிவரை கிறகளியாளறது
  பழுக்கவழுகக்கலக்கிப்
பழக்கமெனுமடைதலுங் கட்டியுமிதிக்கபின்
  பழகரியசமரசமெனும்
படிகொண்டமூலமுத லாதாரமாறும்
  பரப்பிப்பரம்படித்து
பகருமிலைகலைனுக்கு வருசுழியிலடைகின்ற
  பலனெனுங்கைகுலுக்கிப்

பாரமலையோடணு வகண்டமொடுகண்டம்
  பரிட்சிக்கொணாதவிதையைப்
பட்டுழுந்தாதுபிங் தாமலைபாவியே
  பருவமதுசெய்தபின்பு
பாசடரெடுப்பரென் றெடுப்புசீரதனையும்
  பார்த்துக்கழித்துவிட்டுப்
பத்திவைராக்கியக் கடன்மடைஇறந்துகால்
  பாய்ச்சியதுபயிராகவே
பரிபாகபக்குவக் காலமதுபிசகாது
  பார்த்துப்பதந்தன்னிலே
பற்றிப்படர்ந்ததொண் ணூற்றாறுதத்துவப்
  பலகளையறப்பிடுங்கிப்
பரிபூர்ணமாகவே நாளுக்குநாட்கதிர்ப்
  பலகோளாறுப்பரிந்து
பாளையென்னும்பருவ முற்றியமுத்திப்
  பலன்பெற்றசமுசாரிநீ
படைகொண்டமும்மண் டலத்தினுமுன்மகிமையைப்
  பற்றிப்படர்ந்தகுருவே
பாதபங்கயமதுக் காளடிமையாகாது
  பாவத்தழுந்துவேனே
பாசவலைவீசியே மோசமதுசெய்கின்ற
  பாவையர்க்காளாவனே
கொட்டியகருந்தே ளிகாத்தவிழிமின்னார்
  குவித்தவிருபொற்கொங்கையுங்
கோசமொடுமும்மத மிறைக்கின்றகர்விதக்
  குஞ்சரக்கொப்புகானே
கொஞ்சுகிளிமொழியார்க ளாவுநல்லரவின்
  கொடியநஞ்சுப்பையதோ
கூரிருட்கூந்தலென் சொல்லுகேன்கோடையிடி
  குடிகொண்டகருமேகமோ
கோதையிளமின்னார்கள் யோனிப்பெருங்கேணி
  குறையாதயானைமடுவோ
கூறுமுகிலேழும் படர்ந்துவருடிக்கினுங்
  குறையறுக்கொடுபள்ளமோ
கொத்துக்கடங்காத மதகரிதனக்குமது
  கொப்பமோபடுபள்ளமோ
குருனைவத்தொழாமனுக் குப்பைகளொதுங்குமோ
  குப்பைக்கிடங்குதானே

கொலைசெய்மனுரிருக் கின்றபடுகளமோ
கொடுஞ்சிங்கமிடி பொதும்போ
குழகுமெனவிரசத் தேனொழுகுகனியெனக்
கொண்டுநெஞ்சினைவாட்டுதே
கோளடைப்பெண்ணிலத் தாசைதருகின்றதே
கோதையர்கள்காதலாலே
கூளம்தெரிப்பதே யல்லா திருந்தநான்
குளிர்காயநேரமிலையே
கூர்குணமனைத் துநிற்கின்றபரவெளியெலாங்
குடிகொண்டிருந்தகுருவே
கொடியகெடுமாயையைக் கூடாதிருக்கின்ற
குறியருள்வதென் றுபுகலாய்
கோடானுகோடிமறை யாலுமறியாக்குணங்
குடிகொண்டகருணைவடிவே
கூலாயிலாகயில்லல்லாகுவென்பதற்
குரியமகுமூதுநபியே.

அறுபத்துநாலடி ஆசிரியவிருத்தம்-முற்றிற்று.



## கட்டளைக்கலித்துறை.

ஓடியலைந் தயிவ்வையகமுற்று முழன்றுழன்றுந்
தேடியெடுத்தத் திரவியம்யாவையுஞ் செத்தபின்பு
காடியெடுப்பதுமுண்டோமறந்து நடக்குநெஞ்சே
வாடியிரந்தறஞ்செய்வாய்குணங்குடி வாய்த்திடுமே. ௧

பெண்ணாசையென்கிற பேய்பிடித்தாடியபேதைநெஞ்சே
கண்ணாலதில்வருங் கன்மங்கள்யாவையுங் கண்டிலையோ
எண்ணாதபாவங்க ளெண்ணாமற்செய்யு மிப்பேருடம்பு
மண்ணாகாற்றவஞ் செய்வாய்குணங்குடி வாய்த்திடுமே. ௨

ஆடும்படிபொருளாட்சியென்றங்கிங்கு மாயலைந்து
பாடும்படுவதுன் பாரமதோசொல்லு பாழ்மனமே
கூடும்படியென்றேடு மப்பாலுள்ள கூட்டம்விட்டு
வாடும்படும்பெறு முன்னைக்குணங்குடி வாய்த்திடுமே. ௩

ஆதிமுகம்மதருளாமுகம்மதருள்விரிந்த
சோதிமுகம்மது தோற்றமுகம்மது தூயவுளத்
தோதிமுகம்மதென் றுண்மைகண்டாலிவ்வுலகினுக்கு
வாதிமுகம்மதினோடு குணங்குடி வாழ்த்திடுமே. ௪

எல்லாப்படைப்பும் படைத்துயிரணங்களீபவனே
அல்லாவொருவ னவனன்றிவேறிலையாதலினாற்

சொல்லாமற்சொல்லுஞ்சுருதிமுடிவினிற்சொல்லிறந்த
வல்லான் குணங்குடிவாழ்ந்திருப்போமினிவாருமினே. ௫

ஐயோவுலகி லழிவாவரம்பெற்றியாரிருந்தார்
ஐயோவுணக்கந்தகாரமென்னதிலாசையென்றே
பொய்யானவாழ்வுமலையாட்டுவெப்புமாபுரவலர்க்கும்
ஒப்பாருமுள்ள குணங்குடியார்க்கு முறவில்லையே. ௬

உற்றாரிருந்தென்னைப் பெற்றாரிருந்தென்னுனக்குதவி
சற்றேனுமில்லை சொன்னேன்சொன்னேனிதுசத்தியமாய்
செற்றாலுமணைத்தடிவாங்காமனிற்கச்செயம்பெறலாங்
கற்றோர்குணங்குடிகொண்டிடுவாய்மனக்கணமணியே. ௭

எண்சாணுயரத்திருக்குமுடம்பையினிறக்கியுண்ணும்
பஞ்சாட்சரமெனும்பாரியவாளினைப் பாய்ந்தெடுத்துத்
தஞ்சாவூராளுமகாராஜன்பாதந்தனைப்பணிந்தால்
செஞ்சாக்குணங்குடிகொள்வாயிதுபத்திகேணெஞ்சமே. ௮

படிக்கும்படிக்குநடக்கின்றையோவிப்பழஞ்செருப்பா
லடிக்கட்டுமோவுனக்கொத்தாசையாரறையாவிநெஞ்சே
முடக்கிப்படுத்துக்கொண்முச்சந்திக்குப்பையின்மேடுகளி
லடக்கிக்குணங்குடி கொள்வாயதுபரமானந்தமே. ௯

ஆருக்குவர்த விருந்தென்றிராம லருண்மையுள்ள
பேருக்குவந்ததெனவே நினைந்துபிரியமுற்றா
ரூருக்கமைந்தகோரன்னங்களுண்டொன்றுமுறையாய்ப்
பாருக்குணல்லகுணங்குடிபோய் பள்ளிகொண்டிடுமே. ௰

மூலமுகமதுமுப்பாழ்முகம்மதுமோனமுள்ள
பாலமுகம்மதுபத்தியுள்ளோர்களும் பாய்ந்தெடுக்கும்
வேலுமுகம்மதுவேதாந்தமூலவிளக்குடைய
கோலுமுகம்மதுகுன்றாக்குணங்குடிகொண்டவர்க்கே. ௰௧

நாளைக்கிருந்திடலாமெனவெண்ணிநடுநெஞ்சமே
நாளைக்கிருப்பதை நம்புவதோவில்லைநானிலத்தில்
நாளைக்கும்பின்னைக்கும் நாமிருப்போமென்னுநாட்டமற்றெவ்
வேளைக்குநல்லகுணங்குடிவாழ்ந்திருவேளையிதே. ௰௨

நாட்டமென்றேயிரு வுன்னிருபாதத்தினன்னிலையில்
ஓட்டமென்றேயிருவொன்றானவட்சரமோதியதன்
ஆட்டமென்றேயிருந் தோற்றமெனவையுமலியுடைய
நீட்டமென்றேயிரு நெஞ்சேகுணங்குடிநிச்சயமே. ௰௩

நாடுநகருஞ்செல்வோர்களுநடுவுண்டுநாதனுமுண்
டோடுமெனக்குண்டென்றெண்ணியுன்னையுடல்பசித்தாற்

போடென்றுகொண்ட கவளத்தைவாங்கிப் புசித்துக்கொண்டு
பாடுங்குணங்குடி வாழ்ந்திடவேபர மானந்தமே. ௰௪

கட்டளைக்கலித்துறை-முற்றிற்று-ஆக-திருப்பாடல் ௨௱௩.

* * *

## நேரிசைவெண்பா.

கள்ளினங்களுண்ணுங் கழுதைகாளென்சொல்லினும்
எள்ளளவுநும்மிதயத் தெய்திலையே-உள்ளம்
இணங்காமடமாந்த ரெக்கேடுங்கெடினுங்
குணங்குடியார்க்குண்டோ குறை. ௧

உற்றாரழாமனுறவின் முறையார்கிட்டாமற்
பெற்றார்பிறந்தார் பிதற்றாமலெற்றாலும்
ஆங்கிங்கெனாதபடி யாவும்பெருவெளியிற்
றங்கல்குணங்குடி தான். ௨

நாசியினுனியி னடுத்திடைவெளியிற்
கேசிகனாருந் திருநடனம்-வாசியொடுத்
தோரரவெழுவா யுணர்வாயருணெஞ்சே
பாராய்குணங்குடியின் பால். ௩

பாலிடுக்குந்தோற்பையைப் பத்தியுளப்பாவையரின்
காலிடுக்குக்காகக் கரைவனோ-மேலொடுக்கும்
உன்னருளையுங்காட்டி யோங்குங்குணங்குடியின்
றன்னருளையுங்காட்டித் தா. ௪

நஞ்சுண்ணுமாப்போ லுனதருள்பெறவென்
னெஞ்சேநீபுண்ணாய் நினைப்பதேன்-அஞ்சாதே
என்றுமுத்தனம்முள்ளே யேகாதிருப்பதால்
ஒன்றுங்குணங்குடியி னுள். ௫

நீண்டாண்பனைபோலு நெற்பதரைபோலுமே
என்றுனைப்படைக்கா யென்கோவேதீண்டாக்
கல்லாமிடாவைநின் கைத்தடியான்மோதினால்
அல்லாற்குணங்குடி யாகா. ௬

மெத்தத்துணிபோர்க்க மெத்தமெத்தக்குளிருஞ்
சற்றுதுணிபோர்த்துவரச் சற்றுகுளிர்-இற்றதுணி
இல்லைக்குளிருமில்லை யில்லையிதுதானுலமே
சொல்லக்குணங்குடியார் சீர். ௭

நேரிசைவெண்பா-முற்றிற்று-ஆக-திருப்பாடல் ௨௱௰

நாகூர் மீராசாகிபு அவர்கள்பேரில் பாடிய

ஆசிரியவிருத்தம்.



திக்குத்திகந்தமுங் கொண்டாடியேவந்து
தீன்கூறிநிற்பர்கோடி
சிம்மாசனாதிபர்க ளகரேந்தியேவந்து
ஜெயஜெயவென்பர்கோடி
அந்தனருள்பெற்றபெரியோர்களொலியார்களணி
யணியாகநிற்பர்கோடி
அஞ்ஞானவேரறத் திட்டமெய்ஞ்ஞானிய
ரணைந்தருகுநிற்பர்கோடி
மக்கநகராளும் முகம்மதிறசூல்தந்த
மன்னரேயென்பர்கோடி
வசனித்துநிற்கவே கொலுவீற்றிருக்குமுன்
மகிமைசொல்வாயுமுண்டோ
தக்கபெரியோரருட் டக்கியேநிற்கின்ற
தவராஜசெம்மேருவே
தயையைவைத்தெனையாள சற்குணக்குடிகொண்ட
சாகுல்கமீதரசரே.

ஆசிரியவிருத்தம்-முற்றிற்று.



மட்டுவிருத்தம்.

வஞ்சவேல்கொடு மாபிலெறியெனும்
விஞ்சவேதணல் மீட்டியெரிக்கினு
நஞ்சினாழுனுகனவியினும்
அஞ்சிடாதவ ரானந்தமாவரே.

ஆக திருப்பாடல்-உசஉ.



ஆனந்தக்களிப்பு.



இரக்கத்துணிக்துகொண்டேனே-எனக்
கிருக்குங்குறைமுழுது நீகழ்த்திக்கொண்டேனே
இரக்கத்துணிக்துக்கொண்டேனே

௧. கொடிகட்டிக்கொண்டெழு — கோடி-தனக்
குவித்தந்தமகிழ்ச்சியாற் — கூத்துகளாடி
கெடுபுத்தியுடையோரைக் — கூடி-யானுங்
கெட்டலையாமலே — கெதிபெறநாடி (இரக்கத்)

௨. சொற்கடங்காச்சுக — ஞானந்-தன்னிற்
சும்மாவிருக்குஞ் — சுகமதேமோனம்
எட்குடையாயினும் — பானந்-தன்னை
எடுத்துண்டிருப்பதற் — கிச்சித்தேயானும் (இரக்கத்)

௩. வஞ்சியராசையைத் — தாட்டி-விட்டு
வழிபெற்றுக்களிப்புற்று — வாசியைப்பூட்டி
துஞ்சாவறிவினைச் — சூட்டி-அற்ப
தொல்லுலகாசைத் — துணிந்துவிட்டோட்டி (இரக்கத்)

௪. அஞ்சுதூணூட்டிய — மாடி-அது
அஞ்சோடுகாலோட்டை — யடையாமலோடி
பிஞ்சழிந்திடுமென்று — நாடி-யானும்
பேரின்பவீட்டினைப் — பிரியமாய்த்தேடி (இரக்கத்)

௫. நற்பூச்சந்தனவத்தர் — பூசி-மிக
நன்றாகவைத்தாலுநாற்றமே — வீசி
எப்போதுங்கொடுமைசெய் — தோசி-என்றே
இவ்வுடல்வாழ்வுகளியாவையும் — வீசி (இரக்கத்)

௬. மாளிகைமேல்வீடு — கட்டி-மனை
வாழ்வைநிலையென்று — வாழ்கின்றமட்டி
நாளையெமன்வந் — ததட்டிக்-கொண்டு
நடப்பானென்றறியானே — யடிப்பதைவெருட்டி (இரக்கத்)

௭. பட்டுப்பணிகளும் — பூண்டு-கொண்டு
பாழானவாழ்வினைப் — பலனெனமாண்டு
கெட்டவர்களைக்கண்டு — மீண்டுகதி
கிடைக்கும்படிக்கு — நடப்பதற்கீண்டு (இரக்கத்)

௮. காமக்குரோதங்க — ளற்று-சூழும்
கருவிகரணமுஞ்சகலமு — மற்று
நேமநிட்டைகளையு — மற்று-நின்ற
நிலையுமறந்துகுருவடி — பெற்று (இரக்கத்)

௯. எத்தனையெத்தனை — காலம்-இந்த
என்புதசையாலெடுக்கின்ற — தூலம்
மெத்தனைவாழுமிஞ் — ஞாலம்-அதை
மேவாதுமேவாதெடுத்திந்தக் — கோலம் (இரக்கத்)

௰. என்னிலேதன்னை யறிந்தே-என்னுள்
இருந்தாடுஞ்சூக்ஷிரம்பொருந்தா வறிந்தே
அன்னியமிலேகளைத் துறந்தே-குரு
அருளினாலனுதினமுமருளெலா மறிந்தே (இரக்கத்)

௰௧ ஆழித்துரும்பென வங்கும்-இங்கும்
அலைந்துதிரிவதிலஞ்ஞானந் தங்கும்
பாழிறகெடாதருள் பொங்கும்-மடி
பாரத்துத்துணிந்துபரதேச மெங்கும் (இரக்கத்)

௰௨ காடுகரையுஞ் சுழன்று-ஒரு
காட்சியுங்காணுமெனவே யுழன்று
தேடுபத்திற் சென்று-திக்குந்
திசையொன்றுந்தெரியாமற்றெளிதற்கு நின்று (இரக்கத்)

௰௩ ஆடியகூத்தினைப் போற்றி-அருள்
ஆனந்தஞ்சேர்க்குமருளினிற் போற்றி
ஓடியேகாற்றினை யேற்றி-அதில்
உருகியொழுகுமமிர்தத்தைத் தேற்றி (இரக்கத்)

௰௪ நாலிரண்டரைமுழ மான-பின்ன
நாற்றச்சடலத்துணுவென்று ஞானக்
கோலமவிளங்கிய மோன-அருள்
குருவடித்திருவடியுருவத்தை மான (இரக்கத்)

௰௫ எறியமகத்தைத் தடுத்தே-அதில்
இச்சித்துப்பட்சமிகவைத் தடுத்தே
அறிவைக்கொண்டறிவைத் தொடுத்தே-அருள்
ஆனந்தஞ்சேர்க்கின்றவருளினை யடுத்தே (இரக்கத்)

௰௬ பாரினிற்பலவிதங் காட்டி-நல்ல
படிகத்தின்குணமெனப்பரவெளி சூட்டி
ஆரியனருளினைக் கூட்டி-குரு
அருள்செய்தவுடனேயென்வினைகளை யோட்டி (இரக்கத்)

௰௭ மண்டபவுள்ளறை விண்டு-வரும்
மாமணமூறியதேனது வுண்டு
உண்டுகளிப்போரைக் கண்டு-யானும்
உள்ளத்தருக்கினைத்தள்ளினைக் கொண்டு (இரக்கத்)

௰௮ மாதவந்தன்னைப் புரிந்து-ராச
வாதங்கள்செய்கிறோமென்று திரிந்து
சூதோடுவாதை புரிந்து-கெட்ட
சூதரைச்சத்தியமாகப் பிரிந்து (இரக்கத்)

௧௯. பொறிபுலனடங்கிய காலே-பரி
பூரணப்பொருள்வந்துவாய்க்கு மப்பாலே
அறிஞருமறியாது போலே-காணும்
ஆனந்தவெள்ளத்தினுடன தாலே (இரக்கத்)

௨௰. நினைவுங்கனவு மறந்து-நின்ற
நினைவுமறந்தெழுகலையு மறந்து
இனமும்மனமும் மறந்து-பின்னர்
இதனிடைதோற்றிபவிதங்களு மறந்து (இரக்கத்)

௨௧. கற்பட்டுப்பாய்கின்ற தோயம்-போலக்
காட்டிமறைக்கும்பிரபஞ்ச மாயம்
அற்பர்க்குத்தெரியாது பாயம்-என்று
ஆலோசனைசெய்தழியுமுன் காயம் (இரக்கத்)

௨௨. எனையாளென்றறியாத பாடு-என்னை
இக்கோலமாக்கியதேயதன் கேடு
தனையானுமெதிர்கையி னோடு-கொண்டு
சாபத்துடனடர்ந்துகோபத்தி னோடு (இரக்கத்)

௨௩. விண்ணுக்குண்வெளியிருண் மாற்றி-அதில்
வேதாந்தமூல விளக்கினையேற்றிக்
கண்ணுக்குண்மணியாகத் தோற்றிவ்-வருங்
காரணமானகடவுளைப் போற்றி (இரக்கத்)

௨௪. எல்லாருமாணிடர் தாமோ-இந்த
இந்வானபிரமைகளெல்லார்க்கும் போமோ
கல்லெல்லாமாணிக்க மாமோ-என்று
கற்பித்தகாரணங் குருவடி. போற்றி (இரக்கத்)

௨௫. நாதமுங்கீதமுங் கேட்கும்-அந்த
நாயகன்சந்நிதிதன்னிடை சேர்க்கும்
மாதவநன்னிலை யார்க்கும்-நல்ல
மாசறுதேசிகன்பொற்பதம் போற்றி (இரக்கத்)

௨௬. கட்டுப்படுங்கன்மக் குட்டை-வருங்
காலத்தச்சன்கையால்வெட்டிடுங் கட்டை
துட்டத்தொழில்படைத்த மட்டை-இந்த
தூலமென்றெண்ணிக்குருவருள் போற்றி (இரக்கத்)

௨௭. போக்குவரவற்ற போதம்-பஞ்ச
பூதாதியாலடங்காதெழு நாதம்
வாக்கிலமையாத வேதம்-தன்னை
வடித்துப்புகட்டுமகத்துவைப் போற்றி (இரக்கத்)

௨௮. நரம்புதசைதோ லெலும்பு-கொண்டு
நாட்டும்வினைகளுங்காட்டுந் துரும்பு
நிரம்புந்துயர்கொ ளுடம்பு-என்று
நில்லாதென்றெண்ணியில்லலல்லாவைப் போற்றி (இரக்கத்)

௨௯. ஆழித்திரளெனப் பொங்கும்-அருள்
ஆனந்தஞ்சேர்க்குமறிவிற் கடங்கும்
நாளுக்குநாளங்கு மிங்குஞ்-சற்றும்
நாதாந்தவேதாந்தநாதனைப் போற்றி (இரக்கத்)

௩௰. இன்றைக்கிருப்பதும் பொய்யே
இன்றைக்கிருப்பதுமெய்யென் பதையே
என்றுமிருப்பது மெய்யே-என்
எண்ணியெண்ணியருளுண்மையைப் போற்றி (இரக்கத்)

௩௧. பார்க்கப்பலவித மாயும்-ஆகப்
பல்லாயிரங்கோடியண்டம தாயும்
கார்க்குகிலைக்குயி ராயும்-நின்ற
காரணப்பூரணநாதனைப் போற்றி (இரக்கத்)

௩௨. கரும்புசர்க்கரைகற்கண் டாலே-பாகங்
காய்ச்சியெடுத்துத்திரட்டிய பாலே
அரும்பாவிக்கருதுங்கை யாலே-அணைத்
தாட்கொள்ளுநாயகன்றாள்களைப் போற்றி (இரக்கத்)

௩௩. கற்பங்களுண்கிறே மென்றே-வெறி
காஞ்சாவுங்கள்ளுமபினியுந் தின்றே
துப்புக்கெட்டலையாம லின்றேன்-அருள்
தூயமெய்ஞ்ஞானச்சுடரினைப் போற்றி (இரக்கத்)

௩௪. கருவிதழிதனி லோடி-யானும்
காலுகளோய்ந்தும்விடாமலே தேடி
அருவிக்கயர்ந்துளம் வாடி-அலை
யாமலெனக்கருள்வாமனைப் போற்றி (இரக்கத்)

௩௫. நாசிநுனியிடை நின்று-நல்ல
நடனம்புரிவனதக்கலீர்கலி ரென்று
வாசியிலேறிக்கொண் டின்று-காண
வைத்தகுருபரநற்றாளைப் போற்றி (இரக்கத்)

௩௬. தேடியபொருள்புதைப் போரும்-தேச
தேசங்கள்ராஜாங்கமாண்டிருப் போரும்
ஈடெனக்கில்லையென் போரும்-செத்
திறப்போரென்றேமனதிலெப்பப் போற்றி (இரக்கத்)

௩௭. ஆனைகுதிரைக ளொட்டை-ரதம்
ஆசையோடுமேறுமுடலொட லொட்டை
ஞானமிலாதகண் பொட்டை-என்ற
நாதன்குருவறிவித்ததை போற்றி (இரக்கத்)

௩௮. அரசனரண்மனைக் கோட்டை-சூழ
அன்பாகநடனம்புரிகின்ற பட்டை
இரவு'பகன்மனச் சோட்டை-வைத்த
இன்பக்குணங்குடியாரருள் போற்றி (இரக்கத்)

ஆனந்தக்களிப்பு-முற்றிற்று-ஆகபாடல்-௨௱௧.

—†—



## நிராமயக்கண்ணி.

ஆதிமுதலே யகண்டபரிபூரணமென்
றோதுங்குணங்குடிகொண் டோனேநிராமயமே. ௧

தேசிகனென்றே யருநடனமாடுகின்ற
வாசாமகோசரமே வாழிநிராமயமே. ௨

சுத்தத்திருவடியிற் சொக்கியருள்பெறுமுன்
செத்திறந்துபோனாலென் செய்வேநிராமயமே. ௩

கண்ணேமணியேயென் கண்ணிறைந்தகாரணமே
விண்ணேமெய்ஞ்ஞான வெளியேநிராமயமே. ௪

எந்தவிதமென் னிதயந்தெளிவதற்கே
பந்தவினையகலப் பாராய்நிராமயமே. ௫

இறந்தான்முதலகத்தி னென்பதியானென்பதெல்லாந்
துறந்தானேயங்கிலையே சொல்வாய்நிராமயமே. ௬

வற்றாச்சமுத்திரமே வள்ளலேவான்பொருளே
சித்தருளத்திற் றெளிவேநிராமயமே. ௭

உம்பர்க்குமெட்டாதென் றோதுமறையோலமிட்ட
செம்பொற்கிரியே செயமேநிராமயமே. ௮

பேச்சுக்கடங்காத பேரின்பத்தேனமிர்தங்
காச்சிவடித்த கடலேநிராமயமே. ௯

அந்தரத்தினுள்ளேநின் றாடுதிருக்கூத்ததனை
சிந்தையறிகிலனென் செய்வேநிராமயமே. ௰

மோனமௌனமணி மூடிவைத்தபெட்டகமே
தேனமுதவின்பத் தெளிவேநிராமயமே ௰௧

மண்பட்டநெஞ்ச மயக்கமெலாந்தீரவருள்
பண்பட்டார்க்கல்லோ பயன்காணிராமயமே. ௰௨

மனவாக்கணுகா மறைந்தவான்செஞ்சுடரே
இனமாதியாயற்ற விறையேநிராமயமே. ௰௩

பார்க்குமிடமெல்லாம் பரிபூரணமாக
ஏற்றையுடனின்ற வியல்பேநிராமயமே. ௰௪

விண்ணுமுதல்மண்ணாய் விளங்கிநின்றமெய்ச்சுடரே
கண்ணேயென்னின்பக் கடலேநிராமயமே. ௰௫

துன்புறுமென்னெஞ்சத் துயரமெல்லாந்தீர்க்கவெனக்
கன்புருவாய்நின்ற வருளேநிராமயமே. ௰௬

அங்கிங்கெனவொண்ணா வகண்டபரிபூரணமாய்
எங்குநிறைந்த விறைபேநிராமயமே. ௰௭

நாட்டுமிருவினையு நாட்டாருணதருளின்
றேட்டாளவென்ற திறமேநிராமயமே. ௰௮

படர்ந்தமனங்குடியாப் பக்குவர்பாசாடவியைத்
தொடர்ந்துவெட்டத் துணிவார்நிராமயமே. ௰௯

உத்தமர்கட்காகா வுலுத்தப்புலையரென்னும்
பித்தர்நெறியுளரோ பேசாய்நிராமயமே. ௨௰

பாவபுண்ணியத்தைப் பறக்கவிட்டபத்தர்தமக்
கேவல்புகலவிலை யென்றாய்நிராமயமே. ௨௧

முத்திதரும்வேத மொழிந்தவழிநடக்கப்
பெற்றகுருவென் பிணைகாணிராமயமே. ௨௨

ஊத்தைப்பிணமா முடலாயிடிசுவரை
ஏற்றபடிவிடுத லீனநிராமயமே. ௨௩

வஞ்சமழிந்து வருபாசம்விட்டெறிந்து
நெஞ்சந்தெளியநெறி நிற்பார்நிராமயமே. ௨௪

தொந்தங்கடிந்தே சுபமணையினல்லாலென்
றந்திமயக்கம்விட்டுப் போமோநிராமயமே. ௨௫

வாராக்கருணைமழை வந்துபொழிந்தாலொழியத்
தீராமனமயக்கந் தீரேநிராமயமே. ௨௬

பாயும்பசுபாச மடியமடியவரு
டாயனையவின்பந் தருவாய்நிராமயமே. ௨௭

ஐயனேயென்னை யணைத்தாட்கொண்டாளவந்த
மெய்யனேநாத வெளியேநிராமயமே. ௨௮

கூறுமலத்தைக் குணங்குடிபோமன்பருக்கு
யாரைநிகரிடுவ தையாநிராமயமே. ௨௯

பித்தம்பிடித்தலையும் பேய்க்குரங்குபோற்கரணம்
புத்திதனையுலக்கப் போமோநிராமயமே. ௩௰

தஞ்சமெனுஞானத் தடாகமூழ்குவர்க்கு
விஞ்சியகாத விளக்கேநிராமயமே. ௩௧

ஆரிருக்கென்னார்போயென் னவிக்குநந்துணையாம்
பேறுபெறச்செய்தார் பிழைப்போநிராமயமே. ௩௨

போகாக்கவலை புழுக்கமெலாந்தீருதற்கு
வாகாயருள்புரிய வாராய்நிராமயமே. ௩௩

காமக்கடல்கடக்கக் கர்த்தவியக்கப்பல்வைத்தால்
நேமநிஷ்டைகம்பம் னிலைகாணிராமயமே. ௩௪

நின்னைச்சரண்புகுந்தா னிர்மூடமாகவெனை
யென்னத்துக்காட்கொண்ட தியம்பாய்நிராமயமே. ௩௫

சிந்தையறிவைச் சிதையவிட்டுனருள்பெறவே
வந்தெற்குந்திருக்கருணை வைப்பாய்நிராமயமே. ௩௬

தேனமுதேபாகு திரண்டபெருங்கடலே
வானவர்க்குமெட்டா மணியேநிராமயமே. ௩௭

இந்தவிதய மிணங்கிமணங்கவருட்
டந்தடிக்காட்கொண்ட தானுநிராமயமே. ௩௮

இடம்பொருளேவ லெவையுமறந்தகுணங்
குடியார்க்குவணக் குறியேநிராமயமே. ௩௯

ஆழாழிதானு மணைகடவாதானை தனிற்
றாழவிலையேயென் றுயேநிராமயமே. ௩௧

தீதுநலமறியேன் றிசைகாகமெற்றவையும்
ஈதென்றறியே னெளியேநிராமயமே. ௪௧

மீளாவெளியில் விழற்கிறைத்தநீரெனவும்
பாழிலலைவதுமென் பாபமநிராமயமே. ௪௨

ஈன்றெடுத்தமாதா வெனையாட்கொண்டாள்வதென
ஆண்டனைப்பதென்றோ வருளாய்நிராமயமே. ௪௩

சாத்திரங்களோதுஞ் சழக்கர்தமக்குமருள்
மாத்திரைப்போதேனும் வருமோநிராமயமே. ௪௪

அய்யனைமெய்யருளி லாசையற்றநீசனுக்கும்
உய்யுந்திருக்கருணை யுண்டோநிராமயமே. ௪௫

காதாருங்கண்ணீராற் கறைபுறளநின்றவர்க்குச்
சூதுதருங்கண்ணீரென் றுரைகையுநிராமயமே. ௪௬

வஞ்சங்குடியிருந்து வாழுமனத்தினருக்
செஞ்சாதிருக்கு மிருப்பேகிராமயமே. ௪௭

பற்றற்றுநின்ற பரமபதத்தினருக்
கெத்தொழிலுஞ்செய்ய வியல்பேகிராமயமே. ௪௮

வாதேயகண்ட குணங் குடிவாழவைத்தாயே
ஈதேபெருமையுனக் கென்றும்கிராமயமே. ௪௯

என்றுமிருப்போமென் றெண்ணியெண்ணியெண்ணிதயந்
சண்டைபிடிக்கச் சரியோகிராமயமே, ௫௰

மட்டுக்கடங்கா மயக்கமெல்லாந்தீர்த்துவெளி
பட்டோர்கட்கல்லோ பயன்காணிராமயமே. ௫௧

மன்னுமுயிர்க்கு மறலிவரும்பொழுதில்
உன்னையன்றியார்தா முளரோகிராமயமே ௫௨

எண்ணுதவெண்ணமெல்லா மெண்ணியிடைந்துமனம்
புண்ணுவதற்கோ புகுந்தேகிராமயமே. ௫௩

உள்ளதுரியதெல்லா மொழியாதுரைத்தவெனைத்
தள்ளிவிடத்தான் றகுமோகிராமயமே. ௫௪

வன்னத்திருக்கருணை வாழுந்திருவடக்கே
என்னத்தைச்செய்வே னெளியேகிராமயமே. ௫௫

கற்றபடிநடக்கக் கல்லாதபாவியெனைச்
சித்தந்தெளியவருள் செய்வாய்கிராமயமே. ௫௬

பேச்சற்றுஞ்சிந்தை யிறக்கினையுமற்றபதம்
வாச்சாலர்க்கல்லோமௌனம் வாய்க்குகிராமயமே. ௫௭

நிஷ்டநிருவிகற்ப னித்திரைகொண்டேயிருக்க
அஷ்டாங்கயோகமெனக் கருளாய்கிராமயமே. ௫௮

கொல்லுலகிலல்லற் றுயரமெல்லாந்தீர்க்கவொரு
சொல்லருளாய்வந்த துரையேகிராமயமே. ௫௯

உயிர்த்துணைவரேனு முளந்தெளியாயுளுத்தரையோர்
மயிர்க்குணிகர்குறிக்க மாட்டேகிராமயமே. ௬௰

கொல்லாவிரதந்தனைக் கொள்ளக்கொலைஞருள்ளங்
கல்லாகத்தானே கணித்தாய்கிராமயமே. ௬௧

எத்தனையோவுத்தி யெடுத்தெடுத்துச்செய்யுமுடல்
உற்றூரிருக்க வுடையுகிராமயமே. ௬௨

வாயேபுலம்பி வருபாசம்பேய்பிடித்த
தீயனெனைச்சொன்னாலென் செய்வேகிராமயமே. ௬௩

தாயிருக்கப்பிள்ளை தளராதொருபோது
நீயிருக்கநான்றரள நேரோகிராமயமே. ௬௪

சொல்லுக்கடங்காச் சுகங்க டுறவிகட்கு
கல்லுருவுசற்றே நகுங்காணிராமயமே ௬௫

மத்திபத்தினூடே மறைந்தமணிவிளங்கை
நித்தம்விளங்கவரு ணேராய்நிராமயமே ௬௬

மெத்தப்படித்த வெறும்பாசபித்தருக்கே
சித்தந்தெளியாதேன் செய்கைநிராமயமே ௬௭

கள்ளவிருளைக் கடிந்துகரையேறுதற்குத்
தெள்ளியவான்சோதித் திரளே நிராமயமே ௬௮

ஒட்டாதேஉன்னைவிட்டு மோட்டுயமிடரில்
மாட்டாரோயான்பொருக்க மாட்டேநிராமயமே ௬௯

தன்னையறிந்தாற் றலைவன்றனையறிந்த
தென்னுமொழியே யிதங்காணிராமயமே ௭௰

அபயமென்னைக்காப்ப தண்ணலேயுன் னுபய
முபயமுபயதூன முபயநிராமயமே ௭௧

பிரியாமுனதூளையைப் பின்றொடர்ந்தாற்பின்றொடரா
உறியாச்சிறியனென் னையாநிராமயமே ௭௨

நற்குணமேகொண்ட தொழும்பனியாதொல்லுலகிற்
கற்குணத்தாரென்போலுங் காணேநிராமயமே ௭௩

பொய்புக்கவடிமுன்னே பூட்டிவைத்தபெட்டகமாய்
தையுமுடலெடுத்தே னுணகாணிராமயமே ௭௪

சங்குல்பகலொழிந்த காரணர்க்கோவின்னருளைப்
பங்குகொடுத்தாய் பகராய்நிராமயமே ௭௫

தேறுப்பிரபஞ்சத் திடுக்கமெல்லாந்தீர்ந்தவற்கு
மாறுவருகிலைதான் வாய்க்குநிராமயமே ௭௬

சருவதயாளியாய்ச் சஞ்சரித்தநெஞ்சினர்க்குப்
பிரியாவருணிலைதான் பேறாய்நிராமயமே ௭௭

பாதமுடிமேவும் பக்கமுன்னும்பின்னுமற்ற
நாதவடிவேநவமேநிராமயமே ௭௮

பேசவிடமறிந்தும் பேய்க்குரங்குபோற்கருவி
ஊசமடுவதே னுரையாய்நிராமயமே ௭௯

என்னையாட்கொண்டாளவரு மென்குருநாதன்வடிவும்
தன்னையர்க்குஞ்சொல்லத தகுமோநிராமயமே ௮௰

கொப்புவித்தினுள்ளே குடியிருந்தகொள்கையென
எப்பொருட்டுஞ்சித்தா யிருந்தாய்நிராமயமே ௧௮

கூறுங்கருவி குடிபோனவன்பதிக்கே
பாருங்கிட்டாரோவென்னேயாளிநிராமயமே ௮௨

சிந்தைசிதையாச் சிவராஜயோகநிலை
வந்தோர்க்கருள்புரிய வந்தாய்நிராமயமே ௮௩

கோடானுகோடிபறை கூறவறியாதவுனைத்
தேடுகின்றதென்னெஞ்சென் றிருமோநிராமயமே ௮௪

பிரியாவருணிலையைப் பெற்றார்பெற்றாரெனவு
மறியாவெறியனையா னையாநிராமயமே ௮௫

எமனார்விடுதூ தெனும்பாசக்கட்டறுத்தோர்
நமனார்தமக்கு நமனாநிராமயாமே ௮௬

நலங்குவருணமையத் தோன்றுதிருண்மயமாம்
புலனைத்தொலைப்பாயுனக்குப் புண்ணியம்நிராமயமே ௮௭

மன்னிக்கவொண்ணு மனக்குறையுந்தாய்பொறுப்பாள்
நின்னதருளுமந்தநேராய்நிராமயமே ௮௮

எந்தவறிவை யெடுத்தெடுத்தேயோதினுமென்
புந்திமயக்கனுவும் போகாநிராமயமே ௮௯

செகத்துண்மயக்கஞ் சிதறிப்பறக்கவுமென்
றகைப்பறவோரமுத்தந் தருவாய்நிராமயமே ௯௰

உய்த்துணர்வதெல்லா முயிர்க்குயிர்நீதானெனவுஞ்
சித்தந்தெளிந்தோர் திறங்காணிராமயமே ௯௧

அனைத்துயிருநீயென் றறிந்தாரமாப்புமுதல்
நினைக்குமாறெங்கே நிகழ்த்தாய்நிராமயமே. ௯௨

நின்செயல்களென்று நினைப்புமறப்புமுத
லென்செயல்களுண்டோ வியம்பாயநிராமயமே ௯௩

எறும்பூரவூர விரும்புமுதற்றேய்வதுபோல்
இறும்பூருமன்பருள மித்தகைமையநிராமயமே ௯௪

கும்பிக்கிரைதேடிக் கொடித்தார்முகம்பார்த்திதயன்
சந்திப்பிரியக் தருமோநிராமயமே. ௯௫

கடலின்மடைகண்டதெனக் கண்ணீர்கரைபுரளும்
அடியன்முகம்பார்த்திரங்கி யருளாய்நிராமயமே. ௯௬

பருவமதுசெய்யப் படர்பயிராம்பக்குவர்க்குக்
கருவாமருணிலையே கனிகாநிராமயமே ௯௭

நினைப்புமுதிப்புமெலா நின்செயலென் றன்பருளக்
தினைப்போதும்விட்டுத் திரும்பார்நிராமயமே. ௯௮

சிவராஜயோகந் தெளிந்ததிறதினருக்
கெவரைச்சரியிடுவ தெந்தாய்நிராமயமே. ௯௯

உந்திபகலற்ற வகண்டபரிபூரணற்கே
சிந்ததனிநிறைந்த தெளிவேநிராமயமே. ௱

விண்ணூதியாவும் விளங்குவதூரீயெனவும்
கண்ணூரவுங்கனவு கண்டேனிராமயமே ௧௰௯

இல்லாமையில்லாதென் றிதயந்தெளிவதற்கென்
வல்லாண்மைகொண்டு வருமோநிராமயமே ௧௨௰

உன்னையன்றியாவு முளவோவென்றோதியபின்
என்னையென்னத்தில்வைத் திசைப்பாய்நிராமயமே ௧௨௧

கானற்சலமாங் கவிபரசக்கட்டுண்பார்
தானூனேயென்னத் தகுமோநிராமயமே ௧௨௨

காட்டுக்கொலைவேடன் கைக்குள்சிக்குமானெனவு
மாட்டித்துயருறவு மாட்டேனிராமயமே ௧௨௩

கல்லுமுருகுமொரு காலத்திலுமென்னிதயம்
அலலவிறுவதில்லை யையாநிராமயமே ௧௨௪

காயக்கருவி கரணமுதற்காயவைத்த
நேயருளத்தி னிறைவேநிராமயமே ௧௨௫

பல்லாயிரங்கோடி பகிரண்டமுமெவையும்
எல்லாமுனதடிக்கா ளென்றாய்நிராமயமே ௧௨௬

எனக்கோர்நிகருமில்லை யில்லாரில்வல்லாரில்
உனக்கோர்நிகரொருவ ருண்டோநிராமயமே ௧௨௭

செப்புஞ்செழுஞ்செயலுட் சிந்தித்தல்வந்தித்தல்
எப்போவெனைவிட் டியங்கிநிராமயமே ௧௨௮

நீராற்றிரள்குமிழி நேயவுடையும்முடலம்
யாரார்க்குகைகொடுத்த தையாநிராமயமே ௧௨௯

ஒன்றாய்ப்பலவா யுருவருவாயம்முயிராய்
நின்றவுனையாரறிய நின்றாய்பராபரமே ௧௩௰

பெற்றெடுத்தமாதா பிதாக்களிருந்தாலுமெனை
செத்தவுடன்மண்ணிற் றிணிப்பார்நிராமயமே ௧௩௧

எந்தமுயிர்க்கே யெமனுய்வரும்பாசப்
பந்தமகலமுகம் பாராய்நிராமயமே ௧௩௨

அபயமென்னைக்காப்ப தண்ணலேவுன்கடமை
உபயமினியொருவர்க் குண்டோநிராமயமே ௧௩௩

என்னையுனதடிக்கி ழிசைத்தாட்கொண்டாளாக
வின்னுமேயெண்ணி மெலிந்தேநிராமயமே ௧௩௪

நாமவத்தையற்ற நவநாதசித்தர்தமக்
காமக்கரைபுரளக் காணேநிராமயமே ௧௩௫

தேங்காய்க்கிளநீர் செழிப்பற்றிரட்சித்தாய்
பாங்காயருளுவதும் பாராய்நிராமயமே ௧௩௬

கன்னலெனவின்பங் கலந்தொழுகுமுன்னடிக்கே
றன்னானுமென்னபயன் றாயேநிராமயமே ௧௩௭

அமையாமனமமைந்தே யருட்கடிமைபட்டவரை
எமனாருமென்செயலா மெந்தாய்நிராமயமே ௧௩௮

ஒன்றுக்குமெட்டா துறைந்தசுயஞ்சோதியுட
ரண்டர்க்குமெட்டாதென் றறிந்தேனிராமயமே ௧௩௯

வஞ்சமின்றியென்னை வழிபடுத்திவைத்தவனே
யஞ்சலெனநானடைந்தே னையாநிராமயமே ௧௪௰

தாயனையவின்பந் தருபேரின்பக்கடலில்
வாய்மடுக்கிற்றாகம் வருமோநிராமயமே ௧௪௧

முன்னாளெமக்கிருந்த மூதறிவினோர்வசனஞ்
சொன்னாலதுவே சுகங்காணிராமயமே ௧௪௨

அட்டதிக்குமண்விண் ணடங்கும்பெருவெளியில்
கட்டநடுவிருந்த நாதனிராமயமே ௧௪௩

நீதுகலமுதலாஞ் செய்கையகலவைத்தால்
ஈதொன்றும்போதுமெனக் கெந்தாய்நிராமயமே ௧௪௪

கெர்ப்பகத்திலென்னைக் கிடத்தியமுதூட்டுமெனக்
கொப்புவமையாரென் றுரைப்பேநிராமயமே ௧௪௫

எவ்வுலகுமேவற் கிணங்காதோநின்னருடான்
செய்விக்கப்பட்டோர்க்குச் செய்யாய்நிராமயமே ௧௪௬

தன்றேசம்விட்டுத் தனித்ததபோதனர்க்குச்
சென்றவழியெல்லாஞ் சிறப்பாநிராமயமே ௧௪௭

சிந்தைகலக்கஞ் சிதறிவிடச்செய்வதுவே
எந்தத்தவத்தினுநன் றெந்தாய்நிராமயமே ௧௪௮

தேடுவதுநாடுவதுன் சிந்தைத்திருநடன
மாடுவதுமுன்னடியார்க் காசைநிராமயமே ௧௪௯

கண்டபகலிரவுங் காணார்க்குஞ்சூரியனா
றென்றெழுநாமென்ன வியம்பாய்நிராமயமே ௧௫௰

செத்தசவமென்றுஞ் சின்னஞ்சிறியரென்றும்
மூத்தார்க்கிருக்கு முறைகாணிராமயமே ௧௫௧

சட்டரசங்கள்முதற் சாருவில்லங்கசுத்தி
இட்டர்க்குனதருள்வந் தெய்துநிராமயமே ௧௫௨

ஆகமத்துக்கெட்டா வகண்டபரிபூரணமாய்
ஏகவெளியென்றே வியம்பாய்நிராமயமே ௧௫௩

தேகமுடையுமெனத் தேர்ந்தமனத்தினர்போற்
பாசபக்குவத்தைப் படையேநிராமயமே ௧௫௪

காழியுப்புகாழியப்பு காழியார்தன்மையுமப்
பாழெய்திஞோர்க்கே பகராய்கிராமயமே கருரு

கொத்தொடடிமை குடியாகவென்றனையுன்
பத்தருக்கென்றே படைத்தாய்கிராமயமே கருசு

எந்தவுயிரு மெமதுயிரென்றெண்ணியெண்ணிச்
சிந்தைதெளியவருள் செய்தாய்கிராமயமே கருஎ

அந்திப்பகலற்ற வகண்டாகாரமுமென்
புந்திவெளிக்குப் புகுமோகிராமயமே கருஅ

உள்ளுநர்ளுயிரா யுறைந்தவனைத்தொழவே
பள்ளியறையேன் பகராய்கிராமயமே கருகூ

மேலிட்டவாணவத்தை மெலியவிட்டமேலவர்க்கு
மூலத்தெழுந்த முனையேகிராமயமே கசுய

மூலமுதலாறுதல முட்டிநின்றகுண்டலியின்
பாலிற்கதித்தேகப் படுமோகிராமயமே கசுக

பஞ்சசுத்திசெய்த பழவடியாரென்னவுன்னை
யஞ்சலிசெய்தே யடைந்தேனிராமயமே கசுஉ

தொண்டர்பணிக்காளாய்ச் சுகப்படுத்திவிட்டுவிடற்
கென்றிரங்குவாய்கருணை யெந்தாய்கிராமயமே கசுங

ஒலியத்தைப்போலே யுறைந்தமனதினரென்
றுலிக்குறுதுணையா மையாகிராமயமே கசுச

விரிந்தசரியைமுதன் மேனின்றமெய்ஞ்ஞானங்
கரும்புமுதற்கண்டெனவுங் கண்டேனிராமயமே கசுரு

அஞ்ஞானம்விட்டே யறந்தாங்கிவந்தவர்க்கு
மெய்ஞ்ஞானந்தானே விளக்காய்கிராமயமே கசுசு

நின்றுமுத்திப்பூண்டு திரியவெனப்பாவிமனச்
சண்டிப்புரளச் சரியோகிராமயமே கசுஎ

எம்மாவிசைந்த வருவினையும்போகவிட்டுச்
சும்மாவிருக்கச் சுகந்தானிராமயமே கசுஅ

பாசவினையெல்லாம் பறந்திடமெஞ்ஞானவைவாள்
வீசவருடானே விளக்காம்கிராமயமே கசுகூ

தன்னிலிருந்த தலைவன்றனையறியா
தென்னையறிந்தென்னையல னெந்தாய்கிராமயமே கஎய

உன்னைமறப்பிக்க வுருவெடுத்தவாணவப்பேய்
தன்னைமறப்பிக்கத் தகாதோகிராமயமே கஎக

இல்லாதமாயையெனைத் தொடராதவண்ணமொரு
சொல்லருளச்செய்யென் றுரையேகிராமயமே கஎஉ

நற்குணமேகொண்ட தொழும்பனியானொருவ னுலகிற்
கற்குணத்தரென்போலுங் காணேனிராமயமே ௧௭௩

பொல்லாவென்னெஞ்சம் புழுங்கவருகவலை
சொல்லுக்கடங்காச் சுகங்காணிராமயமே ௧௭௪

அலையுமகத்தை யகத்தடக்குமன்பருளம்
உலையினிடுமெழுகுக் கொப்பயிராமயமே ௧௭௫

எழுகடலுமோர்கடுகி னிடையிருக்கக்கற்றாலும்
வழுவுமனத்தினர்க்கு வாமெபதிராமயமே ௧௭௬

பொருக்கெளந்தெதிர்த்த போக்கிரிபோலென்னிதயம்
திரம்பேசுவதென்ன செய்வேனிராமயமே ௧௭௭

சோம்பேரிகள்போற் சுருண்டமனத்தினர்க்குக்
காமவிகாரங் கசப்பாமிராமயமே ௧௭௮

ஒழியாப்பிரபஞ்சத் துறவைமறவார்க்குக்
கெளிற்றிப்படிநரைக் கெதிகாணிராமயமே ௧௭௯

புத்திபிதமகிதப் பூட்டிவிட்டபோக்கர்தமக்
கந்திபகலறுமெனை யாவிராமயமே ௧௮௦

நானெனெருப்பாறு நடக்குமயிர்ப்பாலமுழியான்
றேனெயெனுமறிவைத் தாராயிராமயமே ௧௮௧

மின்னனையபொய்யுடலை மெய்யென்றபொய்யரினி
என்னகதிபெறுவா யெந்தாயிராமயமே ௧௮௨

கருவிப்பெருவெளியிற் கருத்தைச்செலுத்தாருக்
கருவிசொரியவருளாங்காணிராமயமே ௧௮௩

தேயாப்பஞ்சாட்சரவா ளட்டுத்திறத்தினர்க்குங்
காயாபுரிக்கோட்டை கனங்காணிராமயமே ௧௮௪

பூமிப்பாய்வைபவளம் போய்வரினும்பாவிகளைக்
காமவினையகலக் காணேனிராமயமே ௧௮௫

கோணற்கருப்பாசங் கோணூதுகொள்கையென்றேன்
ஆணவத்திலுந்த னறிவாணிராமயமே ௧௮௬

கானலினேர்பொய்யுடலைக் கல்லாகக்கண்டவர்க்கு
நாணமையின்றே நடிக்குமிராமயமே ௧௮௭

சலக்குமிழிபோலவென்றன் சிற்றுடற்கு மித்தனையே
கலக்கமதைவைத்தாயென் கண்மணியிராமயமே ௧௮௮

பொய்வாழ்வைநம்பும் புலையர்தமக்குண்டு
மெய்வாழ்வுவந்து விடுமோவிராமயமே ௧௮௯

கனக்குமிருவினையாங் காலடியைத்தூக்குவதற்
கென்கருமுடிபாதினிமே லெந்தாயிராமயமே ௧௯௦

துறவின்றிச்செய்வினையென் றுரைகைப்பலனேதென்பவர்க்கு
நரகசொற்கமென்றே நவின்றாய்கிராமயமே ௧௯௧

காதொடுகண்வாய்மூக்குங் கண்டமெய்யோடையறிவும்
வாதாடுதற்கே வளந்தேகிராமயமே ௧௯௨

மாதாபிதாவும் வருந்திவருந்திவைத்த
போதனையைப்பார்க்கிற் பிழைகாகிராமயமே ௧௯௩

சொல்லுமளவுஞ் செலுத்துகின்றசிந்தையினோர்க்
கல்லும்பகலுமறு மையாகிராமயமே ௧௯௪

வேதச்சுமையதனை வீம்புக்கெடுத்தவுடன்
மாதவத்திற்கெங்கே வளையும்கிராமயமே ௧௯௫

நரம்பென்புதோலா னடிக்கின்றபாவைதனிற்
குரும்பமுதலெல்லாங் குடிகாணிராமயமே ௧௯௬

தூலத்துளிச்சைத் தொலைத்தாரிஞ்ஞாலமுதல்
ஆலத்துக்கொப்பன் றலைந்தானிராமயமே ௧௯௭

வானேறநூலேணி வைத்தார்போ லுன்னடிபால்
நானேறுவேனென்று நாட்டம்கிராமயமே ௧௯௮

மைந்தர்களைப்பெற்று மறலிக்களித்தனபின்
சிந்தைநெருப்பாயெரியச் செய்தாகிராமயமே ௧௯௯

காலுதிக்கினும்விஜய நாட்டுமன்னர்கோட்டையெல்லாம்
பாலாமணற்சோற்றின் படியாகிராமயமே ௨௱

பாட்டைப்படித்தாற் பகர்ஞானவானென்ப
தேட்டுச்சுரைக்காய்க் கியல்பாம்கிராமயமே ௨௱௧

நின்னருளன்றி னிறைவுகுறைவென்பாருக்
கென்னகதிமுடிவி லெந்தாய்கிராமயமே ௨௱௨

தேகாபிமானத் திரைகடந்ததேசிகர்க்கு
மோகங்கடெங்கே முயலும்கிராமயமே ௨௱௩

சித்தந்தெளிந்த சிவஞானியருலகப்
பித்தருரவைப் பிடியார்கிராமயமே ௨௱௪

புத்திதெளியாப் புலத்தோர்தமைத்துவைத்துனன்
மத்தமனுஷரென மாட்டேனிராமயமே ௨௱௫

தொல்லைப்பெருமல்லற் றொலைத்தாருக்கேயொன்றுஞ்
சொல்லத்தானுண்டோதான் சொல்வாய்கிராமயமே ௨௱௬

போக்கும்வரத்துமெல்லாப் பொய்யென்றபுண்ணியற்கு
நீக்குமருளுண்டே னிகழ்த்தாய்கிராமயமே ௨௱௭

எத்தனையோகற்று மிதயந்தெளியாதிருந்த
பித்தருடனேயம் பிழைகாணிராமயமே ௨௱௮

வஞ்சப்பிரபஞ்ச மயக்கொழிந்தாலல்லாதுன்
அஞ்சலெனும்பொருளிலாகேனிராமயமே ௨௱௯

அண்டுமிருவினைப்பே யண்டாதடிப்பவர்க்கு
தொண்டுசெய்வார்க்கன்றோ சுகங்காணிராமயமே ௨௱௰

என்னெஞ்சந்தானே யெனைக்கெடுக்குமின்னுமெனைச்
சின்னப்படுத்திலென்னசெய்வேனிராமயமே ௨௱௰௧

மூடுமெனதறிவே மூடியிருந்தாலுன்
ஆடுமறிவெங்கேநின்றாடுனிராமயமே ௨௧௨

ஓடியேயுள்ளமட்டுமோடியிதமயங்கி
வாடியேநின்சமுகம்வந்தேனிராமயமே ௨௧௩

மூட்டாளெனப்பட்ட முழுதுமெனக்கியவுனக்
கிட்டமிருந்தாலியம்பாய்னிராமயமே ௨௧௪

ஆலமுறுந்தூலமனித்தியமென்போர்க்காசை
மாலெங்கேநின்றுவருங்காணிராமயமே ௨௧௫

ஆர்ப்புக்குயிரான தண்டபிரண்டமுமாந்
தாற்பரியஞ்சொல்லத் தகுமோனிராமயமே ௨௧௬

எண்டிசையுந்தானாயியங்குமுனைத்தொழுதற்
கண்டாசராசரநின்றாடுனிராமயமே ௨௧௭

காற்றாடிபோலக்கருத்துவந்துதேடினேனே
ஆற்றாதயர்ந்தேனென்னையாணிராமயமே ௨௧௮

எல்லாம்படித்தாடப் பெய்தினரின்புற்றனர்மற்
றல்லாரையாரென்றறிவேனிராமயமே ௨௧௯

அன்னைசுற்றமெல்லா மகலவிட்டமன்பர்தமக்
கின்னலகலும் தேவர்க்காம்னிராமயமே ௨௨௰

சாருதனியன்றியிலைச் சந்தியாமெண்மனத்தை
ஆராயவேண்டாமென்னரசேனிராமயமே ௨௨௧

தத்துமனத்தினர்க்குத் தராபலன்போகிறதை
எத்தனைஎன்றேயுரைப்ப தெந்நாள்னிராமயமே ௨௨௨

கொல்லுங்கொலைக்கஞ்சாக்கொலைஞனெனும்பாவிமனத்
தொல்லையைத்தீர்க்கச்சுகங்காணிராமயமே ௨௨௩

உன்னையறிவென்னை யொதுக்கவைப்பதெந்தநெறி
அன்னையன்றிச்செய்தானுண்டாமோனிராமயமே ௨௨௪

பொங்குங்கருணைப்புறச்சிழித்தார்கள்ளமன
வங்கமெங்கோயோடி வருங்காணிராமயமே ௨௨௫

கல்லாதகல்வியெல்லாங்கற்றுதுயற்ஞானகலை
எல்லார்க்குமின்பவிலையேதோனிராமயமே ௨௨௬

விளங்குஞ்சுடரினையும்வெறுத்தேயென்னைநுங்
குழக்குளப்புமுப்பொனவுபெண்ணுனிராமயமே உஉஎ

சார்ந்தோரைத்தாட்டணிக்குத்தப்பிவிகளைப்புவியில்
என்றுன்படைத்தருவாரெனெத்தாய்நிராமயமே உஉஅ

புத்தியகங்காரம் பூணுமனமிறங்கித்
சித்தநயகத்துவந்தைத் தேருய்நிராமயமே உஉகூ

நாளேறுதிருவடியை நாடுவதுந்தேடுவதும்
ஆனாலதுபெரிதா மையாநிராமயமே உ௩௰

சாற்றுஞ்சுருதிமையந்து கள்ளர்புலைக்குடிலே
சோற்றுவெடுத்தசுவர்காணிராமயமே உ௩க

மன்றுங்கலைஞானமார்க்கமறிந்தோர்க்குமுறும்
அன்னியங்களைறு மறியார்நிராமயமே உ௩உ

சென்னிக்கிசையாச் சிவராஜயோகனிலை
பன்னமலர்ப்பதத்தைவைத்தேனிராமயமே உ௩௩

சென்மமெடுத்தாற்செகமாயைவிட்டழிந்து
நன்மைபெருதனையங்காணிராமயமே உ௩௪

பாசமறவார்பரமபதத்தினர்போற்
பேசிலர்கூடவுங்கான்பேசேனிராமயமே உ௩ரு

நேராய்வழிகாட்டி நிச்சயத்தைச்சொல்லவெனக்
காருண்ணியன்றியபரசேனிராமயமே உ௩௬

வாசகத்திஞானமெல்லாம் வந்ததுபோற்பேசியையோ
மோசப்படவுமுறையோனிராமயமே உ௩எ

பெட்டிநிறையப்பெருக்கிவைத்தபெட்டகத்தாற்
குட்டிச்சுவரென்றேகுறித்தானிராமயமே உ௩அ

மனம்பாசமற்றுநிற்க வாயானுனைப்புகழும்
இனங்கள்முழுதுமெனக் கெதிர்காணிராமயமே உ௩கூ

வாசனையைப்போக்கும்வரமுண்டெனவொருசொல்
நேசருக்குமுண்டோ நிகழ்த்தாய்நிராமயமே உ௪௰

அன்னைபிதாவு மனைத்தகுற்றவாக்கினைக்கா
என்னைப்பிறக்கவைத்தாயெந்தாய்நிராமயமே உ௪க

மாதாபிதாவும்மயநீர்ந்தவாற்றுணைக்கு
வாதாபெனைப்பிறக்கவைத்தாய்நிராமயமே உ௪உ

பின்னைபொருவர்செய்யும் பிழைக்குப்பரிகாரம்
பென்னைத்தெருவில்விட்ட தேன்காணிராமயமே உ௪௩

தொண்டாசைக்கொண்டோர்துயிலார்முகத்தனைக்கக்
கண்டுயிலா ரன்பரெனக்கண்டாய்நிராமயமே உ௪௪

ஈனத்துக்கேற்றவுட லென்னதென்னதென்பதுவும்
ஞானத்துக்கேற்றவர்க்கு நன்றோநிராமயமே ௨௪௫

ஆசைக்கடலி லலைவாய்ப்பட்டேயலைந்து
மோசப்படுதன் முறையோநிராமயமே ௨௪௬

எட்டிரண்டுமீனதென்றுமேனமுயறியாதபடி
வெட்டிவெளிப்பேதையென விட்டாய்நிராமயமே ௨௪௭

பித்தம்பிடித்த பிரபஞ்சத்தாற்போலன்றோ
முத்தர்க்கிருக்கு முறைதாணிராமயமே ௨௪௮

காமக்குரோதமத மாச்சரியக்காரருக்கே
ஆமோ இருக்கருணை யையாநிராமயமே ௨௪௯

ஜெகத்துமயமாயுந் தேஜோமயமாயும்
அகத்துடனுமான தன்றோநிராமயமே ௨௫௰

கேசாதிபாதமுதல் கெர்ப்பக்குவட்டில்வைத்த
ஈசாவுனக்கே யியல்பாம்நிராமயமே ௨௫௧

எக்கலைக்குஞ்சொக்கா தியக்குமுனைத்தொழுதல்
நிர்க்கலைக்கெல்லா நிலைகாணிராமயமே ௨௫௨

அகத்துவிழியு மறிகர்சரிதாட வுன்பால்
முகத்துவிழியோ முயலும்நிராமயமே ௨௫௩

இக்குவிசயஞ் சிவராசயோ கியர்க்காந்
துக்கலையோர்க்குந் துறையேநிராமயமே ௨௫௪

வாழுமொன்றேயென்றே வலக்காரம்பேசிலையோ
ஏழாம்நரகுக் கிரைகாணிராமயமே ௨௫௫

சவடலைக்காரென்றே பெதிர்பேசுமட்டியுடல்
நீடூழிகால நிலையோநிராமயமே ௨௫௬

பாகாய்க்கசிந்துருகும் பரமபதத்தினற்குத்
தேகாபிமானமெல்லாந் தீயுணிராமயமே ௨௫௭

ஆவியுடல்பொருளு மடங்கக்கொள்ளைகொண்டுமெனைப்
பாவியென்றுதள்ளப் படுமோநிராமயமே ௨௫௮

அளந்தாலுமிந்தவுல கவ்வளவுமெவ்வளவும்
உளந்தெளியாருக்கருடா னுண்டோநிராமயமே ௨௫௯

சொன்னபடிக்கிணங்கா துட்டன்யானுகிலுமுன்
வன்னமலர்பதத்தை வைப்பாய்நிராமயமே ௨௬௰

பாதமுடியின் பரமார்த்தமானவுனக்
கேதுவடிவென்றே யிசைப்பேனிராமயமே ௨௬௧

மூன்றுளிருக்க முறைபோலுமூர்த்திகளாய்
என்றுளுருவிதனைக் கொண்டாய்நிராமயமே ௨௬௨

மடக்கெடுத்துவீசி மணற்குடித்தநீரதனல்
கடற்குறையுண்டோவென் கண்ணேநிராமயமே ௨௬௩

தானேதனெவ்வுயிர்க்குந் தற்பரமாய்நிற்பதுடல்
ஊனாகிக்கொண்ட வுளவேனிராமயமே ௨௬௪

பாசமொழிந்துநெறி பற்றிநின்றவித்தகர்க்கு
வீசுந்திருக்கருணை வீசாய்நிராமயமே ௨௬௫

கற்றகல்வியற்று கன்மமுதல்பாசமற்று
உத்தமர்க்குச்சித்த மொடுங்குநிராமயமே ௨௬௬

சித்தநிரஞ்சனத்திற் சென்றிருக்கல்லார்க்குப்
புத்திநிருவிகற்பம் பூணும்னிராமயமே ௨௬௭

நீட்டிக்குறுக்க நெடும்பகையென்பாரதுபோற்
காட்டிமறைக்கக் கணக்கோநிராமயமே ௨௬௮

கர்ப்பூரவுண்டை கரைவதுபோலக்கரையுந்
தற்போதர்க்கருணை தந்தானிராமயமே ௨௬௯

தேனோடுபாகாய்த் திரண்டமுதமென்னவுமென்
ஊனோடுடலோ டுறைந்தாய்நிராமயமே ௨௭௰

கண்டித்தவெள்ளுக் கரும்பும்போலும்மெனது
சண்டித்தமெய்பதற்குச் சார்நீநிராமயமே ௨௭௧

ஐந்துபுலவேடருக்கே யாளாக்கினாலுனக்கு
வந்தபலனென்ன வழுத்தாய்நிராமயமே ௨௭௨

ஓயாக்கவலைக் குதித்தாம்புழுக்குரும்பை
ஆயனெனவகுத்த தையாநிராமயமே ௨௭௩

ஐவர்க்குமென்னை யடங்கச்சிறையாக்குவது
உய்யுங்கருணைக் குளதோநிராமயமே ௨௭௪

ஊசிதனைக்காந்த முகந்தணைக்குமாறெனவே
பாசத்தைப்போக்கியருள் பாராய்நிராமயமே ௨௭௫

உள்ளந்தெளிந்தே வொளியாய்பிறங்கினர்க்குக்
கள்ளந்தெளியக் கனவுகண்டேனிராமயமே ௨௭௬

அற்புதமேநிற்குணமே வன்பர்க்கருள்புரியுஞ்
சற்குருவேயெங்கள் சலுவேநிராமயமே ௨௭௭

ஆழியவருள்வாழி யள்ளியடியேன்மனக்கா
மழையாய்ப்பொருந்தானீ முன்னோர்க்குவாழியவள் ௨௭௮

மூத்தர்க்கும்வாழியெங்கும் முன்னோர்க்கும்வாழியருள்
வித்தர்க்குவாழியெங்கள் விளங்காய்நிராமயமே ௨௭௯

ஒழியாவருள்வாழி யுத்தமர்களும்வாழி
அழியாப்பதிவாழி யையாநிராமயமே ௨௮௰

குன்றுக்குணங்குடி கொண்டோரை செய்வித்தகரும்
எந்நாளும்வாழியரு ளெந்தாய்நிராமயமே ௨௮௧

நிராமயக்கண்ணி-முற்றிற்று- ஆகபாடல்-௨௮௧





## பராபரக்கண்ணி.



அண்டபுவனமென்று மாடுதிருக்கூத்தினையான்
கண்டுமகிழ்ந்திடவே காட்டாய்பராபரமே ௧

ஆதிபராபரண்டவனா யகதுகதுவாகிதுவாய்ச்
சோதியாய்நின்மலமாய்ச் சூழ்ந்தாய்பராபரமே ௨

வேதமறைப்பொருளை வேதாந்தத் துட்கருவை
ஓதியுனையறிந்தோ ருண்டோபராபரமே ௩

அண்டம்புவனமுட னாகாசமென் றநம்பிக்
கொண்டாய்மெய்ஞ்ஞானக் கூத்தோபராபரமே ௪

நாவார்புகழ்கெட்ட நாயகனேநாதாங்கப்
பூவாய்மலர்ந்திருக்கப் பூத்தாய்பராபரமே ௫

பேராற்பெரிய பெரும்பொருளேபேதைதனைக்
காராசிருந்தும் பலனுமோபராபரமே ௬

மாராய்சுற்கருணை மாவருட்சித்திக்கிடவே
பாராயோவையா பகராய்பராபரமே ௭

ஆறுலுமுன்பாதம் யாசித்திருப்பதற்குத்
தானுயிரங்கியருள் தாராய்பராபரமே ௮

நாதாந்தமூல நவீட்டுக்குள்ளிருக்கு
மாதவத்தோர்க்க ன மருவேபராபரமே ௯

உடலுக்குயிரேயென் னுள்ளமேயுன்பதத்தைக்
கடலுமலையுந்திரிந்துங் காணேன்பராபரமே ௰

மாங்கிரத்துக்கெட்டா மறைப்பொருளேமன் னுயிரே
சேர்ந்தவெழிதோற்றத்தின் சித்தேபராபரமே ௰௧

தனியேனுக்காதரவு தாரணியிலில்லாமல்
அனியாயமாவதுனைக் கழகோபராபரமே ௰௨

ஓடித்திரிந்தலைந்து முன்பாதங்காணமல்
வாடிக்கலங்குகிறேன் வாராய்பராபரமே ௰௩

தூராதிதூரங் கொலைந்துமதிலுன்பாரம்
பாராதபாவத்தாற் பயந்தேன்பராபரமே ௰௪

தேடக்கிடையாத திரவியமே தேன்கடலே
ஈடெனக்குமுண்டோ விறையேபராபரமே ௰௫

அரியபெரும்பொருளே யன்பாயொருவார்த்தை
பரிபூரணமாய்ப் பகராய்பராபரமே ௰௬

ஐயோவெனக்குதவு மாதாவைவிட்டுவிட்டுத்
தையலரைத்தேடித் தவித்தேன்பராபரமே ௰௭

எத்திசையுநோக்கி யிசையாதிருக்கூத்தாய்
வித்தைவிளையாட்டு விளைவிப்பாய்பராபரமே ௰௮

எப்பொழுதுமுன்பதத்தி லென்கருத்தேயெய்துதலுக்
கிப்பொழுதேகைப்பிடித்தா ளிறையேபராபரமே ௰௯

வாதுக்கடரவரும் வம்பரைப்போற்றேஷிமனம்
ஏதுக்கடர்வதியா னெளியேன்பராபரமே ௨௰

கண்ணேமனோன்மணியே கண்பார்வைக்கெட்டாத
விண்ணடங்காவெட்ட வெளியேபராபரமே ௨௧

அடக்கவரிதா மாயிரம்பொரியைக்கட்டிப்
படிக்கப்படிப்பெனக்குப் பகராய்பராபரமே ௨௨

எத்தவங்கள்செய்காலு மின்பமுடன்பதத்தை
முற்றொருபோது முற்றார்பராபரமே ௨௩

சொல்லுக்கிணங்காது சூத்திரத்தைப்பார்த்திருக்க
அல்லும்பகலுமெனக் காசைபராபரமே ௨௪

நாற்றச்சடலமதை நம்பார்முகந்திருக்கப்
பூத்துமலர்ந்திருக்கும் பூவேபராபரமே ௨௫

சோற்றுப்பொதியைச் சுமந்துதிரிந்தலைந்தே
ஆற்றுமணின் றுகளைத் தழுதேன்பராபரமே ௨௬

காற்றுத்துருத்திதனைக் கல்லாயணைத்திருக்கச்
சூத்திரமாய்நின்றாய் சுழியேபராபரமே ௨௭

கோலத்திருவடிவு கோதையர்களாசையினால்
ஆலைக்கரும்புபோ லானேன்பராபரமே ௨௮

கேளாயோவென்கவலை கேட்டிரங்கியடிமைதனை
ஆளாயோவையர்பா லானேன்பராபரமே ௨௯

எத்தனைதான்குற்ற மெதிர்த்தடிமைசெய்தாலும்
அத்தனையுநீபொறுப்ப தழகோபராபரமே ௩௰

அல்லல்வினையா லறிவுகெட்டவான்மாவாய்
நெல்லாம்பதருமென நின்றேன்பராபரமே ௩௧

சொல்லரியஞானச் சுடரேயொருவார்த்தை
செல்வம்பொழிந்திடவே செப்பாய்பராபரமே ௩௨

சித்தமுனைத்தொழா நிர்மூடனாயிருக்கும்
பித்தனாயேன்காண பிறந்தேன்பராபரமே ௩௩

உற்றார்களாலு முறவின்முறையோராலும்
பெற்றார்களாலுமுனைப் பிரிந்தேன்பராபரமே ௩௪

ஏழைமுகம்பார்த் தெளியேனையெப்பொழுதும்
ஆழாமலாண்டருளென் னழகேபராபரமே ௩௫

பாவவுடலெடுத்துப் பாதகனாயான்பிறந்தால்
ஆவிகெடுவதுனக் கழகோபராபரமே ௩௬

வாராயோவென்னிடத்தில் வந்தொருக்காலென்முகமும்
பாராயோசற்றே பகராய்பராபரமே ௩௭

பார்க்கப்பலவிதமாய்ப் பல்லுயிருக்குள்ளிருந்தும்
ஆர்க்குந்தெரியாம லானாய்பராபரமே ௩௮

ஆனாலும்பொல்லா தரும்பாவியாகவுடல்
ஏனோவெடுத்தே னெந்தாய்பராபரமே ௩௯

கற்பூர தீபக் கனலொளிபோல்காட்சிதர
முப்பாழும்பாழாய் முடித்தாய்பராபரமே ௪௰

கரும்பேரசமே கடலமுதேகண்மணிக்குள்
அரும்பொருளாய்நின்ற வழகேபராபரமே ௪௧

ஏழையடியேனை எப்படியுங்கைபிடித்து
ஆளா திருப்பதுனக் கழகோபராபரமே ௪௨

ஆரையோவையா வடியேன்பிதற்றுதலைக்
கேளாயோவென்றன் கெதியோபராபரமே ௪௩

ஊனாகியுள்ளுயிரி லொட்டாதவக்கருவாய்த்
தானாகிநின்ற தனுவேபராபரமே ௪௪

பொன்னான்மயக்கெடுத்துப் புத்திகெட்டுநானனைவே
பன்னாளுநின்றாற் பலனோபராபரமே ௪௫

இல்லல்லாகூவென் றெனைமறந்துகொண்டுனையே
சொல்லவருள்மெஞ்ஞானச் சுடரேபராபரமே ௪௬

ஐயோவடிமைதனக் காரிருந்துமென்னபலன்
கையாற்கவிந்தணைக்கக் காணேன்பராபரமே ௪௭

ஆனாலுமேழை யடியேனுக்காதரவாய்த்
தானாயிறங்கியரு டாராய்பராபரமே ௪௮

தூங்கியிருந்து தொழுவோர்முகம்பார்க்கும்
வேங்கைப்புலியாக்கு விப்பாய்பராபரமே ௪௯

கண்ணேகருக்கேயென் கண்மணியேகண்ணிறைந்த
விண்ணடங்காவெட்ட வெளியேபராபரமே ௫௰
காசாசைகொண்டு கலங்கியேகெட்டலைந்த
தோஷியாய்நின்றேன் துணையேபராபரமே ௫௧
ஐயோவெனத்துய ராரிடத்திற்சொல்லிநின்று
கைபெசிக்கப்போரேனென் கண்ணேபராபரமே ௫௨
என்னதான்செய்திடினு மென்விதியைச்சொல்லியழ
வுன்னையன்றிவேறெனக்கு முண்டோபராபரமே ௫௩
முக்கண்விழியொளியே முத்திதருமுத்தமனே
அக்கண்டிரந்தோர்க் கறிவேபராபரமே ௫௪
முப்பாழும்பாழாகி முத்திபெற்றிருக்கவெனைக்
கைப்பிடிப்போதெப்போதென் கண்ணேபராபரமே ௫௫
உல்லாசமாக வொளிவுபரந்திடவுன்
செல்வம்பொழிந்திடவே செப்பாய்பராபரமே ௫௬
மாச்சரியஞ்செய்யு மகமொடுங்கிமுத்திபெறக்
காட்சிதருவதெப்போ கண்ணேபராபரமே ௫௭
சண்டாளனென்றெனைச் சகலவுரையிட்டாலும்
கொண்டணைப்பதுன்பாரங் குருவேபராபரமே ௫௮
முத்திதருமெஞ்ஞான முச்சுடரைக்காணாமற்
செத்திறந்துபோனாலென் செய்வேன்பராபரமே ௫௯
தன்னையறிந்துணரத் தகையாயொருவார்த்தை
இன்னபடியென்றே யியம்பாய்பராபரமே ௬௰
களியேகண்ணின்னுடையா கைப்பிடிப்போமென் றுசற்றே
எளியேன்முகம்பார்த் திரங்காய்பராபரமே ௬௧
பாசவினைபோக்கி பவவினையைப்பாழாக்கி
ஆசைவைப்போர்தங்களருகேபராபரமே ௬௨
ஆளவருவோமென் றன்பாயொருவார்த்தை
ஏழைமுகம்பார்த் தியம்பாய்பராபரமே ௬௩
நிலைக்காட்டுங்காய நிசமென்று நிச்சயித்தே
புலையாட்டனென்றுதள்ளப் போமோபராபரமே ௬௪
பார்க்கப்பலவிதமாய்ப் பலசமையமாகவொரு
வாக்கைவெளிப்படுத்தி வைப்பாய்பராபரமே ௬௫
ஆனாலெளியேனுக் காதாரமேயில்லாமல்
போனாலுனக்கழகோ புகலாய்பராபரமே ௬௬
நீச்சாய்ப்பெருகிவர நிரம்புமானந்தவெள்ளம்
பாய்ச்சாயோவையா பகராய்பராபரமே ௬௭
எத்தனையோகெஞ்ச மெளியேன்றனக்குதவி
உற்றாருனைத்தவிர வுண்டோபராபரமே ௬௮

கன்னமிட்டுக்கருவி கரணமதைச்சுட்டோர்கள்
தன்னுக்குட்டாளும் அனுவேபராபரமே ௬௯

காயாமற்காய்த்துக் கனிந்துசொரிவதற்கு
மாயமாய்ப்பூத்த மலரேபராபரமே ௭௰

உயிருக்குயிரான வுட்கருவுக்குள்ளமைவே
தயையாயெனக்குகவி தந்தாய்பராபரமே ௭௧

அறிவையறிவோருக் கானந்தவெள்ளமதாய்
கறையறவேபொங்குங் கடலேபராபரமே ௭௨

மறைப்பொருளைக்காணு மடையனிவனென்றியம்பிச்
சிரிப்பார்சிரிக்கிலென்ன செய்வேன்பராபரமே ௭௩

குறிவிளக்குகுருவடியைக் கொள்கையுடன்போற்றுமல்
அறிவுமயங்குகின்றேனையாபராபரமே ௭௪

வல்லாரைக்கெஞ்சி வலியாரைக்கால்பிடித்து
இல்லாரைநம்பி யிருந்திடைந்தேன்பராபரமே ௭௫

சொல்லும்பதர்தூக்கிச் சூத்திரத்தைப்பாராமற்
கல்லும்நெல்லுமபோலாகக் கலந்தேன்பராபரமே ௭௬

ஜெகமுழுதுந்தோற்றியுமுன் சீர்பாதங்காணமற்
றிகைத்தழுதேனீயுந் தெளிவாய்பராபரமே ௭௭

கள்ளர்கருத்துகளைக் கட்டோடறுத்தவருக்
குள்ளிருக்குமெய்ஞ்ஞான வொளியேபராபரமே ௭௮

கும்பிக்கிரைவிரும்பிக் கொடுப்பார்தமைத்தேடிச்
சம்பித்திருந்தே சலித்தேன்பராபரமே ௭௯

ஆண்காதவாசை கடித்தாலென்காண்முகமும்
வீங்காதோனவயோ விதியேபராபரமே ௮௰

தூங்காமற்றூங்கி தொழுதிருக்கவென்னுடைய
ஆங்காரமெல்லா மகற்றாய்பராபரமே ௮௧

தேனமிர்தமூறத் திவ்யமதுரஞ்சொரியத்
தாணுயொருவார்த்தை தாராய்பராபரமே ௮௨

சாத்திரங்களோதுஞ் சதுர்மறையோர்க்கெட்டாத
சூத்திரமாய்நின்ற சுழியேபராபரமே ௮௩

வேற்றொருவர்சாணுகை வேதாந்தத்துட்பொருளைப்
பார்த்தோர்கட்கெய்தும் பலனேபராபரமே ௮௪

சாதிசனத்துடனே சார்ந்திருந்துபட்டதுயர்
போதும்போதும்போதும் போதும்பராபரமே ௮௫

உற்றாரைநம்பியிருந் தொருபலனுங்காணமற்
செத்தாலெனக்கதுதான் சின்னம்பராபரமே ௮௬

செல்லுமுறையறிந்து சித்திவழிகாணுமற்
கல்லுமரமபோலானேன் கண்ணேபராபரமே. ௮௭

ஓகோவுனையறிந்து ஒருபலனுங்காணுமற்
போகாமற்காத்தெருளென் புனையேபராபரமே ௮௮

உன்னையறிவதற்கோ வுடலெடுத்தேனென்றன்னைச்
சின்னஞ்சொல்லுவார்கட் கென்செய்வேன்பராபரமே ௮௯

தெரியாதவின்பத் தெளிவாய்யருண்மயமாய்ப்
பரிபூரணமுடனே பாராய்பராபரமே ௯௰

ஆச்சிதனைத்தேடி யாசைவைத்தலையாமற்
பூச்சியபேனே பிறந்தேன்பராபரமே ௯௧

காசைவிரும்பிக் கலங்கித்திரிந்துன்பால்
ஆசைவிரும்பா தலைந்தேன்பராபரமே ௯௨

சாகாமற்செத்து தயச்சிதானந்தமாய்ப்
பாகமாயாகமுகம் பாராய்பராபரமே ௯௩

வாராயோவையா வந்திரங்கிக்கொண்டணைக்கப்
பாராயோசற்றே பகராய்பராபரமே ௯௪

ஆசைவலைப்பாசபொறி யத்தனையுங்கட்டறுத்து
வாசிதனிலேற்றியெனை வைத்தாள்பராபரமே ௯௫

வேஷந்தனைப்போட்டு வேதாந்தசாத்திரத்தைக்
காசுபணம்பரிக்கக் கற்றேன்பராபரமே ௯௬

செய்ததெல்லாங்குறறஞ் சிறியேன்றனக்கிரங்கிக்
கைதூக்கிக்கொண்டருளென் கண்ணேபராபரமே ௯௭

மாளாமயக்கறுத்து மனக்கரையைத்தான்கழுவி
ஆளாக்கிக்கொள்வாயென் னையாபராபரமே ௯௮

நாட்டமங்குமின்இருக்க நாதாந்தமுத்திநிலை
காட்டாயணைந்தருளென் கண்ணேபராபரமே ௯௯

சிந்தைதனைத்தெளிந்து சித்திமுத்திபெற்றுயர்ந்த
உன்றன்குணங்குடியார்க் குயிரேபராபரமே. ௱

பராபரக்கண்ணி-முற்றிற்று-ஆகபாடல்-௯௯௩.

## றகுமான் கண்ணி.

பார்க்கப்பலவிதமாய்ப் பல்கவந்தன்னையடை
காக்குந்திருக்கருணைக் கண்ணேறகுமானே ௧

ஈறுமுதலுமற்றே யியங்குகின்றமுச்சுடராய்க்
காரணிக்கும்பூரணமே கண்ணேறகுமானே ௨

பாணிக்கவொண்ணுப் பதம்பெறுதற்கென்சிரசைக்
காணிக்கைவைத்தேனென் கண்ணேறகுமானே ௩

பொய்யடிமையாக்கிலுமுன் பொன்னடிக்காளாக்கியென்னை
கையைக்கொடுத்தணைத்தான் கண்ணேறகுமானே ௪

பெண்டுபிள்ளையென்றே பிதற்றுதல்பொய்யல்லாமற்
கண்டபலனென்றுமில்லை கண்ணேறகுமானே ௫

பேதலித்தேனுன்னடிமை பேதமில்லாமலுனைக்
காதலித்தேனண்டருள்செய் கண்ணேறகுமானே ௬

ஏகப்பெருவெளியி லிருக்கடவிற்கற்பமற்ற
காகமதுவானேனென் கண்ணேறகுமானே ௭

ஐயோவுனதருளி லாசையற்றபாவியென்னைக்
கையைநெகிழ்த்தாதருளென் கண்ணேறகுமானே ௮

சோதமயமாகவெங்கும் பூரணித்தகாரணத்தைக்
காதலித்துநின்றேனென் கண்ணேறகுமானே ௯

எல்லார்க்குமுதளிக்கு மியல்புபோற்றேரைகட்கும்
கல்லுள்ளமுதளிக்குங் கண்ணேறகுமானே ௰

சொல்லும்பதர்நீக்கி சும்மாயிருந்தருளைக்
கல்லாருங்கல்லேயென் கண்ணேறகுமானே ௰௧

வெட்டவரும்பாவியென்னை வீணிலெனைத்தள்ளாமற்
கட்டியணைத்தாண்டருள்செய் கண்ணேறகுமானே ௰௨

யானைரதமேறு மரசர்பெருவாழ்வுமுதற்
கானற்சலம்போலல்லவோ கண்ணேறகுமானே ௰௩

எவருடைமையுமெடுத்திட் டென்னுடைமையென்பவர்க்கு
கபரில்வருந்துணையே கண்ணேறகுமானே ௰௪

ஊணெடுத்தநாண்முதலாய் உபயோகமற்றயான்
காணினிலவானேனென் கண்ணேறகுமானே ௰௫

வாசிதனிலேறி மனமகிழ்ந்துவாழாமற்
காசாசைகொண்டேனென் கண்ணேறகுமானே ௰௬

வீடோவென்றேகம் விழுமிடர்தான்வீதிகளோ
காடோசெடியோவென் கண்ணேறகுமானே ௰௭

பாகமுடன்வளர்த்த பாழுடலுநாய்க்கிரையோ
காகங்கழுக்கிறையோ கண்ணேறகுமானே ௰௮

ஏங்காமலங்குமிங்கு மேகாந்தமாகவுனைக்
காண்கவந்துபாங்கருள்செய் கண்ணேறகுமானே ௰௯

தொண்டுசெய்யாநின்ற துறவியர்களேயருளைக்
கண்டுகொள்ளக்கண்டாயே கண்ணே றகுமானே ௨௰

அல்லும்பகலு மடிமைமனந்தேம்புதற்குக்
கல்லுங்கரைந்திடுமென் கண்ணே றகுமானே ௨௧

வேட்டைபெரிதென்றே வெறிநாயைக்கைப்பிடித்து
காட்டிற்புகலாமோ கண்ணே றகுமானே ௨௨

அடைத்தமனக்காட்டை யாளுமைந்துகள்வரையுங்
கடத்தமுடிவதில்லை கண்ணே றகுமானே ௨௩

மடம்புநாய்போல மயங்குமென்னையுன்னைவிடக்
கடத்துவரைக்காணேனென் கண்ணே றகுமானே ௨௪

வையம்பொய்யென்றே மறையோலமிட்டதெல்லாங்
கையுமெய்யுமாச்சுதென்றன் கண்ணே றகுமானே ௨௫

சொல்லருமெய்ஞ்ஞானச் சுடரொளிகண்டாலென்மனக்
கல்லுங்கரைந்திடுமென் கண்ணே றகுமானே ௨௬

மாதாபிதாவுமென்னை மயக்கிமயக்கியுன்னைக்
காதலிக்கவொட்டாரென் கண்ணே றகுமானே ௨௭

வெற்றிதருமெய்ப்பொருளை வேதாந்தத்துட்கருவைக்
கற்றோர்க்கருள்புரியுங் கண்ணே றகுமானே ௨௮

உடையாபரணமென் னுன்னியுன்னிப்பாவிமனங்
கடைப்படலாமோவென் கண்ணே றகுமானே ௨௯

ஓபாக்கவலையினு ளுள்ளுடைந்துவாடுதற்கோ
காயமெடுத்தேனென் கண்ணே றகுமானே ௩௰

நேசம்வைத்துன்னடிமை நின்பதத்திற்கல்லாது
காசுதனக்கோவென் கண்ணே றகுமானே ௩௧

எண்ணுதவெண்ணமெல்லா மெண்ணியெண்ணியுன்னடிமை
கண்ணுக்குட்சிட்டானேன் கண்ணே றகுமானே ௩௨

பொய்யெடுத்தானென்று புறக்கணித்தாயாகிலென்னைக்
கையனைப்பாருண்டோவென் கண்ணே றகுமானே ௩௩

விண்ணுடர்காணு விரிகருணைச்செஞ்சுடரைக்
கண்குளிரத்தந்தருள்செய் கண்ணே றகுமானே ௩௪

தங்குபேரின்பமதைச் சார்ந்தகுருநாதனுக்கே
கங்குல்பகற்றுணறுமென் கண்ணே றகுமானே ௩௫

தூங்காமற்றூங்கி தொழுதுதொழுதுன்னருளைக்
காணவெனக்கருள்செய் கண்ணே றகுமானே ௩௬

இன்றுளோர்நாளைக் இருப்பதுபொய்யென்பதையான்
கண்டுகொண்டேனையாவென் கண்ணே றகுமானே ௩௭

பீற்றற்றுருத்திதனைப் பீக்குழியைச்சாக்கடையைக்
காத்தேன்வளர்த்தேனென் கண்ணேறகுமானே ௩௮

போதத்தனைப்புதைத்த புல்லர்க்கிருப்பூச்சி
காதற்றதும்வருமோ கண்ணேறகுமானே ௩௯

பாடிப்படித்தறிந்தும் பற்றற்றுறுபாசவலைக்
காடுகொண்டுபோவாறென் கண்ணேறகுமானே ௪௰

நிறைந்தபரிபூரணமே நிற்குணமேநிர்மலமே
கருணைக்கடலேயென் கண்ணேறகுமானே ௪௧

பார்ப்பாயோவென்றன்முகம் பாவியாகாமலெனைக்
காப்பாயோவையாவென் கண்ணேறகுமானே ௪௨

மெய்யெடுத்தநாண்முதலா மெய்யறியாப்பாவியெனைக்
கைவிடவேண்டாமென் கண்ணேறகுமானே ௪௩

சோற்றுப்பொதியைச் சுமந்தேயலைந்துசுழற்
காற்றுத்துரும்பானேனென் கண்ணேறகுமானே ௪௪

சேர்ந்தசுற்றந்தன்னைச் சிதறவிட்ட சிந்தையர்க்குக்
காந்தமலையேயென் கண்ணேறகுமானே ௪௫

உலையினிடுமெழுகி னொப்பாகவென்றனுள்ளம்
கலைதலதுகாரியமோ கண்ணேறகுமானே ௪௬

ஆவிதனைத்தாங்கா யாட்டுகின்றவையறிவைக்
காவலிடவருள்செய் கண்ணேறகுமானே ௪௭

வேஷத்தனைப்போட்டு மெய்மயக்கும்பொய்க்குருவாய்க்
காசுபணம்பறித்தேன் கண்ணேறகுமானே ௪௮

எட்டிப்பிடிக்கும் விதமறிந்தா லுன்பதத்தைக்
கட்டிப்பிடித்திடுவேன் கண்ணேறகுமானே ௪௯

அவியாமனமவிய வாயுங்கலையோர்கடமை
கவியுந்திருக்கருணைக் கண்ணேறகுமானே ௫௰

சித்திதரும்வேதாந்தச் செழுஞ்சுடரைச்சின்மயத்தை
கற்றவர்க்குமுத்திதருங் கண்ணேறகுமானே ௫௧

அருவிசொரியும்படிக் கப்பரத்திலன்புவைத்தாற்
கருவிபிரியாதேன் கண்ணேறகுமானே ௫௨

மாராயவெள்ள மருங்கழிந்தநின்கருணைக்
காரார்மழைபொழியுங் கண்ணேறகுமானே ௫௩

எண்படாதெண்ணமெல்லா மெண்ணியெண்ணிநெஞ்சமொரு
கண்படாதலங்குவதோ கண்ணேறகுமானே ௫௪

கோலங்குறியில்லாக் குருவடிதொழார்கண்மனங்
காலனிருப்பிடமோ கண்ணேறகுகானே ௫௫

உள்ளுயிரினுள்ளே யுறைந்தபரஞ்சோதிவரிற்
கள்ளமனந்துள்ளாதென் கண்ணே றகுமானே ௫௬

சேர்க்குந்திரவியமுஞ் சித்திரமணிமண்டபமுங்
கார்க்குந்துணையோவென் கண்ணே றகுமானே ௫௭

பட்டுடையுமொப்பனையும் பாதகமுமென்னைவிட்டுக்
கட்டொழிவதில்லை கண்ணே றகுமானே ௫௮

எண்ணாதவெண்ணமெல்லாமெண்ணாதிருக்குமனக்
கண்ணாடிக்குண்முகமாங் கண்ணே றகுமானே ௫௯

மண்டபமுந்தண்டிகையு மாளிகையுஞ்சாளரமுங்
கண்டுகழிக்கவருள் கண்ணே றகுமானே ௬௰

மன்னுங்கருவி மௌனமணிப்பெட்டகத்தைக்
கன்னமிடப்போமோவென் கண்ணே றகுமானே ௬௧

என்றுமன்னைசுற்றமுத லெனக்குப்பழிகாரரெனக்
கண்டறிந்துகொண்டேனென் கண்ணே றகுமானே ௬௨

கொடியமனத்துயிரைக் கூடாதிருப்பதற்குக்
கடுகமுடிகிவருங் கண்ணே றகுமானே ௬௩

ஏச்சுமழிமயக்கு மில்லார்களாலுடைதேங்
காய்ச்சிரட்டையானேனென் கண்ணே ரகுமானே ௬௪

விள்ளறியவேதம் வினவுதலையுங்கடந்து
கள்ளமனந்துள்ளுவதென் கண்ணே றகுமானே ௬௫

வேதக்கருவை வினைகருணைக்குஞ்சர்த்தை
காதலித்தேனுதரித்தாள் கண்ணே றகுமானே ௬௬

அரும்பேமலரேயென் னாசைதரும்வாசனையே
கரும்பேரசமேயென் கண்ணே றகுமானே ௬௭

பூரணமேயற்புதமே பொங்குகருணைக்கடலே
காரணமேயென்றனருட் கண்ணே றகுமானே ௬௮

ஓயாதோவென்கவலை யுன்னருளாலென்கருவு
காயாதோவையாவென் கண்ணே றகுமானே ௬௯

ராஜாங்கம்வேண்டி ரதகஜங்களேறுதற்குக்
காசெங்குங்கேளேனென் கண்ணே றகுமானே ௭௰

தந்தைதாயென்றே தயங்குகின்றபாவிமனக்
கண்டிறக்கவந்தருள்செய் கண்ணே றகுமானே ௭௧

அச்சமெனக்கில்லையென வைம்புலனென்பாழ்மனத்தைக்
கைச்சூறையாடிவிட்டேன் கண்ணே றகுமானே ௭௨

இனியவமிர்தம்பொங்கி யெங்குங்கரைசுத்திவரக்
கனிவாய்திறந்தருள்செய் கண்ணே றகுமானே ௭௩

ஆணையிட்டேனாணையிட்டே ஐயனேயுன்னருளைக்
காணவெனக்கருள்செய் கண்ணே றகுமானே ௭௪

அல்லும்பகலு மறிவிலயமாவோர்க்குக்
கல்லும்பிளந்திடுமென் கண்ணே றகுமானே ௭௫

புவியுமெழுவானும் பொன்னுலகும்பல்லுயிருங்
கவியுந்திருக்கருணைக் கண்ணே றகுமானே ௭௬

எண்ணரியதாக விருந்திடினுஞ்சூக்கிரமோ
கண்ணிலொளிபாய்ந்ததுவோ கண்ணே றகுமானே ௭௭

உளையோவொழுக்கோவென் னுள்ளங்கழுவத்தழுவச்
சழுவாத்துடக்கோவென் கண்ணே றகுமானே ௭௮

உற்றகிளைத்திரையு முறைறவின் முறைத்திறையுங்
கத்தரித்துவிட்டருள்செய் கண்ணே றகுமானே ௭௯

நற்பவளக்கொம்பே நவமணிக்குமற்புதமே
கைப்பொருட்குமெய்ப்பொருளே கண்ணே றகுமானே ௮௦

ஒப்புறவுதப்பி யுணர்வற்றனைக்கைவிட்டுக்
கப்பறைகைகொண்டேனென் கண்ணே றகுமானே ௮௧

பசப்பப்பணம்பறிக்கும் பாவிக்குறுமுகத்தைக்
கசப்பாகக்கண்டேனென் கண்ணே றகுமானே ௮௨

வேதியர்க்குமாதவர்க்கு மெய்யடியார்கட்குமுனைக்
காதலிப்போருக்குமருள் கண்ணே றகுமானே ௮௩

வேரைவேரோடறுத்து மெய்யடிமையாக்குதற்கென்
காரியத்திற்றுமதமென் கண்ணே றகுமானே ௮௪

பழகப்பழகிவரும் பாக்கியத்தைப்பைமுதலைக்
களவுகொடுத்தேனென் கண்ணே றகுமானே ௮௫

நாமான்மைகண்முழுது நாசமாக்கார்தமக்குங்
காமவினைபோமோவென் கண்ணே றகுமானே ௮௬

அடிமையுனதபய மாகாதிருக்கினுமென்
கடைவழிக்குக்கட்டமுதே கண்ணே றகுமானே ௮௭

வேதாந்தவேதமெல்லாம் விட்டேறியேகடந்து
காதலித்துநின்றேனென் கண்ணே றகுமானே ௮௮

இனமுஞ்சனமுமென் மெண்ணியெண்ணியுன்னடிமை
கனசழக்குப்பட்டேனென் கண்ணே றகுமானே ௮௯

நவசூத்திரத்தைவிட்டு நன்னினைவென்னுதுன்மனங்
கவலைப்படுவதென்ன கண்ணே றகுமானே ௯௦

மடிப்புங்கொலைகளவும் வஞ்சகமுமென்னெஞ்சைவிட்டுக்
கடக்கடப்பதில்லை கண்ணே றகுமானே ௯௧

பலவிட்டத்தைச்சுட்டிப்பார்தவித்துப்பாவிமனங்
கலங்கிமலங்குவதேன் கண்ணேறகுமானே ௬௨
உள்ளக்கருத்தானுவந்துறவுகொள்ளாயல்
கள்ளமனந்துள்ளுவதேன் கண்ணேறகுமானே ௬௩
மன்னுமுகம்பற்ற மயக்கமறக்கலையோரை
கண்ணெடுத்துப்பாரேனென் கண்ணேறகுமானே ௬௪
தேசிகனென்னுந் திருட்டுக்குருக்கள்சொல்லோர்
காசாய்மதியேனென் கண்ணேறகுமானே ௬௫
தன்னையறிந்து தவம்புரிபாத்தன்மையினுற்
கன்னெஞ்சனுனேனென் கண்ணேறகுமானே ௬௬
மாடகூடங்கண்மணி மண்டபமுமன்றுகளுங்
காடுகொள்ளக்கண்டேனென் கண்ணேறகுமானே ௬௭
குரவெளியவேகதறிக் கூப்பிடினுங்காணாக்
கருவேகுருவேயென் கண்ணேறகுமானே ௬௮
மருளாத்தவந்தான் மறப்புநினைப்பவர்க்குக்
கருணைக்குணக்குடியாம் கண்ணேறகுமானே ௬௯
உதிக்குமுணர்வன்றியுணர்வோயுணர்வொன்றிற்
கதிக்குங்குணக்குடியென் கண்ணேறகுமானே ௭௰

றகுமான்கண்ணி-முற்றிற்று-ஆகபாடல்-௭௰.

—†—



## எக்காலக் கண்ணி.

முத்திதரும்வித்தை முனையில்வைத்துச்சீராட்டி
நித்தமறவாமனினைப்பதினியெக்காலம் ௧
ஆகியின்மேலாசை யடர்ந்தெரிந்தவக்கினியின்
சோதியினுல்வந்து சுகம்பெறுவதெக்காலம் ௨
காமக்கடல்கடக்கக் கர்த்தவியக்கப்பல்வைத்து
நேமநிஷ்டைதம்பநிறுத்துவதுமெக்காலம் ௩
பங்கப்பழி பேணிறைந்த பையல்யானையலர்கள்
கொங்கைபைநான்பாராக் குருடாவதெக்காலம் ௪
கொங்கைதனைப்பாராக்குருடாயிருப்பதுடன்
அங்கமுமிழ்மோக மழிவதினியெக்காலம் ௫
அங்கமுமிழ்மோக மழிந்தேயறமெலிந்து
வன்கிழவிபோல வரண்டுணர்வதெக்காலம் ௬

வாசியினுநெறி வலமிடந்தான் றிரும்பாமற்
றேசிநடைபோல திடப்படுவதெக்காலம் ௭

தேசிநடைபோலத் தியங்காச்சுழிமுனையை
நாசிநுனியிலதை நான்மறிப்பதெக்காலம் ௮

நாசிநுனிகடந்து நாசமாய்ப்போகாமல்
வாசியுமென்கையில் வசப்படுவதெக்காலம் ௯

மையலெனுமாலை மார்பநிறையப்பூண்ட
தையலர்களெல்லாமென் றாயாவதெக்காலம் ௰

கஞ்சாவபினர்க்குக் கற்பமெனவுண்ணாமல்
எண்சாண்பனங்கள் இறக்கியுண்பதெக்காலம் ௧௧

பொய்யேமிகுத்த புதர்ப்பாவிப்பையல்யான்
ஐயோவென்றேயழுதுன் னடிபணிவதெக்காலம் ௧௨

ஐயோகூவென்ன வலர்வடியுண்ட வென்றன்
பொய்பாணமெய்யின் பிழையறுவதெக்காலம் ௧௩

மருவுதகைமறந்து மனமுமதமிறந்து
இருகையுமேந்தி யிரந்துண்பதெக்காலம் ௧௪

இருகையுமேந்தி யிரந்துகுடித்தேன்நான்
கருகாயுலர்ந்து சலிப்பறுவதெக்காலம் ௧௫

ஆசானந்தாலே யணைந்திருந்துமோர்த்துலகக்
கூசாடிப்பேசி யுணர்வருள்வதெக்காலம் ௧௬

வாசிவாவென்று வதந்தெள்ளமுதமுண்டு
பேசினான்வாழ்ந்தே பிழைதீர்வதெக்காலம் ௧௭

எக்காலக்கண்ணி-முற்றிற்று-ஆகபாடல்-௭௮

—*—



## கண்மணிமாலைக்கண்ணி.

அத்துவிதமே யறிவகண்டிதாகாரக்
கர்த்தவியமேயென் கண்ணேபராபரமே ௧

தற்பரமேசிற்பரமே தானென்றுநின்றதுவும்
கற்பகமேயற்புதமே கண்ணேபராபரமே ௨

உடலுயிரா யுளங்குளிர்ந்தசெந்தேனே
கடலேநிறையமுதே கண்ணேபராபரமே ௩

கொட்டிலுவத்தமுத்தே குவிந்தவைரத்தினமே
கட்டிப்பசும்பொன்னேயென் கண்ணேபராபரமே ௪

சட்டாசவர்க்கமே சார்ந்தோர்க்குச் சக்தனமே
கட்டழகு பெண்ணேயென் கண்மணிபராபரமே ௫

செல்வப்பெருக்கே திரண்டமணிப்பொக்கிஷமே
கல்விக்களஞ்சியமே கண்மணிபராபரமே ௬

இன்னமுதே தேக்கற்கண்டே யெனக்கேற்ற முக்கனியே
கன்னலரும்பாகேயென் கண்மணிபராபரமே ௭

பிக்சாத்திரண்டமுதே பிரியாப்பெருவாழ்வே
காய்ச்சாதசெப்பொன்னேயென் கண்மணிபராபரமே ௮

கற்பவளக்கொம்பே நவின்றமணிப்பெட்டகமே
கைப்பொருட்குமெய்ப்பொருளே கண்மணிபராபரமே ௯

பட்டைக்கருப்புவட்டே பாகுகொண்டசர்க்கரையே
கட்டிக்கரும்பேயென் கண்மணிபராபரமே ௰

துன்பக்கடலைத் தொலைத்தோர் நினைத்திருக்குங்
கம்பமற்றபாற்கடலே கண்மணிபராபரமே ௧௧

பொய்ப்பொருள்களெல்லாம் புறக்கணித்தபுண்ணியர்தங்
கைப்பொருள்சித்தேயென் கண்மணிபராபரமே ௧௨

பவக்கடலைநீக்கிப் பரிவாய்க்கரையேற்றுங்
கவிழாமரக்கலமே கண்மணிபராபரமே ௧௩

தம்பனங்கொண்டே தரித்துநின்றவோங்காரக்
கம்பத்தடியானேனென் கண்மணிபராபரமே ௧௪

மலிகாதலகொண்டவகையான் மண்ணிற்கவிழ்ப்பதற்கோ
கலகம்விளைத்துவிட்டாய் கண்மணிபராபரமே ௧௫

தெள்ளியவான்சோதி தெளிக்குமெல்லைக்கரையுங்
கள்ளம்படுத்திவிட்டாய் கண்மணிபராபரமே ௧௬

புண்ணீரொழுகிப் புழுங்குமனத்தினர்போற்
கண்ணீர்கலங்கவிட்டாய்கண்மணிபராபரமே ௧௭

பித்தர்கள்போலும் பிதற்றிக்காகம்போலுங்
கத்திகத்திசாகவிட்டாய் கண்மணிபராபரமே ௧௮

போற்றுமற்சிக்கை பொருந்தசமர்க்காற்றுமற்
காற்றுப்பறக்கவிட்டாய் கண்மணிபராபரமே ௧௯

நெற்சகர்க்கேபொப்பாக நிற்பதற்கோவெள்ளறிவிற்
கற்பித்துவிட்டுவிட்டாய் கண்மணிபராபரமே ௨௰

சொல்லாச்சுயஞ்சோதிச் சுடர்க்கொழிக்கநெஞ்சகருங்
கல்லாகச்செய்துவிட்டாய் கண்மணிபராபரமே ௨௧

அவிழ்ந்தவிக்குசிக்கைதயும்மீதாசைவைத்தக்கனையுங்
கவிழ்த்துபாழாக்கிவிட்டாய் கண்மணிபராபரமே ௨௨

ஜென்மங்கொலைத்தடிமை சின்மயமாய்நின்றவுடன்
கன்மங்தொலைத்தருளாய் கண்ணேபராபரமே ௪௧

சிந்தியொளிபரப்பிச் சிதறுநவகண்டாயோ
கந்தனையுங்க்கருளாய் கணணேபராபரமே ௪௨

அஷ்டாங்கயோகமதி லாசையுறவேயுனது
கட்டைவெட்டுமுன்னருளாய் கண்ணேபராபரமே ௪௩

விற்புருவத்தூடு விளங்குமொளிபந்தாடக்
கற்பித்களித்தருளாயென் கண்ணேபராபரமே ௪௪

ஒப்பிலருளாழி யோடவடியேற்குமொரு
கப்பலாய்வந்தருளாய் கண்ணேபராபரமே ௪௫

உனையாள்வோமென்றடிமை யுள்ளங்குளிர்ந்திடநின்
கனிவாய்திறந்தருளாய் கண்ணேபராபரமே ௪௬

பொய்கோத்தமெய்யதனைப் போட்டுவிடுமுன்னமெனைக்
கைகோர்த்தணைத்தருளாய் கண்ணேபராபரமே ௪௭

வாய்ச்சதெனக்கென்று மகிட்சிகொண்டுநின்றிடநின்
காட்சியளித்தருளாய் கண்ணேபராபரமே ௪௮

மலைக்குமலைதிரிந்து மனுவாசமேவனமுமனக்
கலக்கந்தவிர்த்தருளாய் கண்ணேபராபரமே ௪௯

நாளுமடவாரை நண்ணகதழுவக்கனவுங்
காணாதுகாத்தருளாய் கண்ணேபராபரமே ௫௰

தெண்டரிடஞ்சென்றிடவுந் தொண்டுசெய்துநின்றிடவுங்
கண்டித்துவைத்தருளாய் கண்ணேபராபரமே ௫௧

மூலவர்க்கமாக முழுமதிபாலுங்கொடுத்து
காலபயந்தீர்த்தருளாய் கண்ணேபராபரமே ௫௨

சோற்றுலெடுத்த சுவரிடியாமற்பாது
காத்துமுகம்பார்த்தருளாய் கண்ணேபராபரமே ௫௩

மூலக்கனன்மூட்டி முட்டிவனையுங்காலனையுங்
காலாலுதைத்தருளாய் கண்ணேபராபரமே ௫௪

சிட்டனெனவும்பூசை செய்தேனுமிப்பாவிக்
கட்டைகடத்தேறவைத்தாள் கண்ணேபராபரமே ௫௫

எட்டுமோரெட்டையு மெட்டெட்டுக்கயிறதனாற்
கட்டவுநல்லிஷ்டம்வைத்தாள் கண்ணேபராபரமே ௫௬

ஆதாரமாறுமடுக் கடுக்காக்கடத்திக்
காதுக்குமேலேற்றிவைத்தாள் கண்ணேபராபரமே ௫௭

கும்பித்துரேசித்துட் கொள்ளும்படிக்குகவிக்
கம்பமுனைகாட்டிவைத்தாள் கண்ணேபராபரமே ௫௮

பட்டிப்பசும்பாலை பக்குவத்துடன்காலைக்
கட்டிக்கறந்தடித்தாள் கண்ணேபராபரமே ௫௯

நில்லாவுடற்கு நிலையங்கொடுக்குமொரு
கல்லாவின்பாலளித்தாள் கண்ணேபராபரமே ௬௰

சோமப்பாலூட்டிச் சுரந்தவாமப்பாலுங்
காமப்பாலுங்கொடுத்தாள் கண்ணேபராபரமே ௬௧

மண்டைநடுமண்டலத்துண் மண்டியமுதுண்டிடவுங்
கண்டங்கடத்திவைத்தாள் கண்ணேபராபரமே ௬௨

மூலாதாரத்தின் மூலைகொண்டேர்ந்தெழுந்த
காலாற்கனலெரித்தாள் கண்ணேபராபரமே ௬௩

ஆயுங்கலையிரண்டு மாயாதடக்கியென்றன்
காயநிலைக்கவைத்தாள் கண்ணேபராபரமே ௬௪

அற்பவுடலா யருந்தவமேபுரிந்திடவுங்
கற்பமுறைதனைக்களித்தாள் கண்ணேபராபரமே ௬௫

அண்டபிண்டமென் றதின் றுநிந்திருக்கூத்தை
கண்டுகளிகூறவைத்தாள் கண்ணேபராபரமே ௬௬

எண்ணாதவெண்ணமெல்லா மெண்ணாமலென்றன்மனக்
கண்ணாடிக்குள்ளளித்தாள் கண்ணேபராபரமே ௬௭

எவ்வுலகுந்தானா யிருந்தவனேயான்றொழவுங்
கவ்வுமலக்கட்டறுத்தாள் கண்ணேபராபரமே ௬௮

அற்பவுடல மழிந்திடுமுன் றீபமிட்ட
கர்ப்பூரமாக்கிவைத்தாள் கண்ணேபராபரமே ௬௯

விலங்கினங்களோடே விற்றிடவுமேழைநெஞ்ச
கலங்காதவண்ணம்வைத்தாள் கண்ணேபராபரமே ௭௰

அடுத்துக்கெடுக்கு மரிவையர்களாகாமற்
கடக்கக்கடத்திவைத்தாள் கண்ணேபராபரமே ௭௧

காற்றுந்தொலைய நறவணையுநாரியர்தங்
காற்றும்படாதுவைத்தாள் கண்ணேபராபரமே ௭௨

ஆணிப்பொன்மேரு வாமுளையுமுன்னடிமை
காணுங்கருணைவைத்தாள் கண்ணேபராபரமே ௭௩

வனவாசமேக வறமளித்துன்பொற்பதத்தைக்
கனமாயிறைஞ்சவைத்தாள் கண்ணேபராபரமே ௭௪

எட்டிப்பிடித்தாலு மெட்டாதுநின்றவனைக்
கட்டிபிடிக்கவைத்தாள் கண்ணேபராபரமே ௭௫

மதபேதமோதி மறைக்குமறைசொல்வதெல்லாங்
கதையாய்முடித்துவைத்தாள் கண்ணேபராபரமே ௭௬

அண்டபிண்டமாயுமதற் கப்பாலுநின்றவெளி
கண்டவுனைக்கட்டிவைத்தாள் கண்ணேபராபரமே ௭௭

உலையிலிடுமெழுகா யுள்ளப்பதைத்துருகிக்
கலங்கியதுங்கண்டிலேயோ கண்ணேபராபரமே ௭௮

வெம்பிடிககொக்கேதன் மெலிக்கேதனென்கண்ணீருங்
கம்பலையுங்கண்டிலேயோ கண்ணேபராபரமே ௭௯

மெத்தமயலுற்று விருப்பமொடுபன்னாளுங்
கற்றும்பாழாக்கிவிட்டேன் கண்ணேபராபரமே ௮௰

பாலங்கடந்துபெரும் பாதைகடவாமலும்விண்
காலங்கடத்திவிட்டேன் கண்ணேபராபரமே ௮௧

பூக்கமலமெடுத்துன் பொன்னடியையாளுமென்றுங்
காத்திருந்துபூசைசெய்வேன் கண்ணேபராபரமே ௮௨

விண்கொண்டுநின்று விளங்குமுனையெக்காலம்
கண்கொண்டுகண்டேன் கண்ணேபராபரமே ௮௩

ஐயோவென்செய்கே னருமற்றபாவிடைநீ
கையைவிடலாமோவென் கண்ணேபராபரமே ௮௪

நட்டநடுவீடுசென்று நானொளித்திருந்துனையுங்
கட்டித்தழுவேனே கண்ணேபராபரமே ௮௫

அல்லும்பகலு மடியேன்படுந்துயர்க்குக்
கல்லுங்கரைந்திடுமென் கண்ணேபராபரமே ௮௬

பொன்னைப்புதைத்துவைத்துப் போவாருளந்தோறுங்
கன்னங்கருநிறங்காண் கண்ணேபராபரமே ௮௭

பணத்தைபணமெனவும் பார்த்ததுண்டோவுன்றனக்கென்
கணக்குத்தெரியாதோ கண்ணேபராபரமே ௮௮

நிற்கும்பொழுதாடை நெகிழ்ந்தாலுபகாரங்
கைக்குஞ்சொலுவதுண்டோ கண்ணேபராபரமே ௮௯

தரையிலுலகனைத்துந் தானாயிருந்துமொரு
கடுகிடையுமானாயென் கண்ணேபராபரமே ௯௰

உனக்குளெனைமறந்தோ ருள்ளக்கருத்திலுண்மாய்
கனிக்குளுறுவண்டானாய் கண்ணேபராபரமே ௯௧

நெக்குருகிநின்றநிலை தோன்றுதனிற்குணத்தார்
கைக்குட்பந்தாட்டிநின்றாய் கண்ணேபராபரமே ௯௨

பதித்தமனம்வாழி பரமார்த்தரூபம்வாழி
கதித்தனிலைவாழி கண்ணேபராபரமே ௯௩

அத்துவிதம்வாழி யறிவகண்டிதம்வாழி
கர்த்தனேநீவாழி கண்ணேபராபரமே ௯௪

கற்பரமேவாழி தாராதுகந்ததுவுங்
கற்பகமேவாழியென் கண்ணேபராபரமே ௬௫

சிற்பரமேவாழி சிவயோகியர்வாழி
கற்பனையெல்லாம்வாழி கண்ணேபராபரமே ௬௬

நற்பதவியும்வாழி நவிலுன்மறைவாழி
கற்பதாரிகள்வாழி கண்ணேபராபரமே ௬௭

சித்தர்கணம்வாழி சின்மயனுங்கான்வாழி
கர்த்தவியம்வாழியென் கண்ணேபராபரமே ௬௮

மாதவத்தோரும்வாழி மௌனமுத்திரையும்வாழி
காதலித்தோரும்வாழி கண்ணேபராபரமே ௬௯

குவலயத்தோரும்வாழி குணக்குடியாரும்வாழி
கலையற்றோரும்வாழி கண்ணேபராபரமே ௱

கண்மணிமாலைக்கண்ணி-முற்றிற்று ஆகபாடம் அ-அய

*

## மனோன்மணிக்கண்ணி.

மெய்தொழலுமேலுந்திகேஸ்வரனை
கைதொழவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௧

கோப்பாகவுமுனையான் கொண்டாடிப்பாடவுங்
காப்பாகவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௨

பெண்களிர்த்தத்தோடுனையான் பிரியாமனம்புணரக்
கண்களுறங்காக்கனவு கண்டேன்மனோன்மணியே ௩

மலர்த்திருக்கும்பொற்கமல மணவரையிலிருவருங்கை
கலந்திருக்கவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௪

மெய்மஞ்சட்குளிர்ப்புங்கண் விழிப்புமெக்களிப்புமெனைக்
கைமிஞ்சவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௫

மைதிட்டவுங்கயற்கண் மலரின்மலர்முலையிற்
கைபூட்டவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௬

மெய்தழுலவும்மிருவர் மெய்யோடுமெய்நெருங்கக்
கைதழுவவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௭

வாமப்பாலைப்பெருக மறுவாவிபம்வருகக்
காமப்பாலுண்ணக்கனவு கண்டேன்மனோன்மணியே ௮

பாலனுகவுங்கானற் பாலுணவுமென்னைவிட்டுக்
காலனேகவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௯

வடியாவருளமிர்தம் வடியவடியக்குணங்
குடியரோடிகனவிற் குடித்தேன்மனோன்மணியே. ௰

கோடிபெருமதிகள் கூடுமொருமதிபோல்
வாடினேன்மானேபெண் மானேமனோன்மணியே ௧௧

கண்ணேயென்கண்மணியே கண்குளிர்ந்தகட்டழகுப்
பெண்ணேயமிர்தப் பிழைப்பேமனோன்மணியே ௧௨

பெண்ணேமயிலனமே பேரனமேயென்றனையென்
கண்ணிற்கிடைக்கக் காண்பேன்மனோன்மணியே ௧௩

வன்னவுடைக்கமுன்றன் வாலவயதினுக்கும்
அன்னநடைக்குமென்ற னாசைமனோன்மணியே ௧௪

கூந்தலிலங்கக் குறும்பைத்தனத்துலுங்க
சேர்ந்துநடப்புரிந்து நிற்பாய்மனோன்மணியே ௧௫

துவளுந்துடையிடையுந் தோகைமயினடையும்
பவளயிதழுமென்று பார்ப்பேன்மனோன்மணியே ௧௬

மலர்மாலைகள்கிடந்து மார்பிற்பின்னலாடுமுன்றன்
அலர்முலையும்பாலென் றணைவேன்மனோன்மணியே ௧௭

வெய்யிற்பட்டாலும் வெதும்புமுடலாயுனது
மெய்யிற்றொட்டாலுங் காதம்வீசும்மனோன்மணியே ௧௮

காற்றுப்பட்டாலுங் கலங்குமென்றன்மேனியுநீ
பார்த்துத்தொடவின்பப் படைப்பேன்மனோன்மணியே ௧௯

பிடியானைப்போலும் பிடிப்பேன்முலைக்குணங்
குடியாரைப்போலுங் குடிப்பேன்மனோன்மணியே ௨௰

கூந்தலுக்குநெய்தோய்த்துக் குளிர்மஞ்சணீராட்டி
வார்ந்துசிங்காரித்து வைப்பேனமனோன்மணியே ௨௧

காலிற்பனிநீர்விட்டுக் கழுவிமடிமீதுவைப்பேன்
மேலிலத்தரும்பூசி விடுவேன்மனோன்மணியே ௨௨

காதபரிமளிக்குங்கஸ்தூரிப்பொட்டிடுவேன்
போதுஞ்சவ்வாதணிந்துபுணர்வேன்மனோன்மணியே ௨௩

தலைக்குமினுக்கெண்ணெ கடவிச்சடைபின்னிவைப்பேன்
முலைக்குவன்னக்கச்சிறுக்கி முடிப்பேன்மனோன்மணியே ௨௪

கட்டாடைவர்க்கமெல்லாங் கண்டுகளித்துயர்ந்த
பட்டாடைவர்க்கம்வைத்துப் படைப்பேன்மனோன்மணியே ௨௫

மூக்குத்திகாதுகுத்திமுழுவயிரந்தூக்கிவைப்பேன்
நோக்குமுத்துந்தூக்குமுத்துங்குவிப்பேன்மனோன்மணியே ௨௬

கைக்கஞ்சரிகடகங் கல்லுமிழைத்துக்கொடுப்பேன்
மொய்க்குழற்குசடைப்பில்லை முடிப்பேன்மனோன்மணியே ௨௭

தங்கக்கொலுசுஞ்சிலம்புத் தண்டைரத்நபாடகமும்
கொங்கைக்குமோகனமாலை கொடுப்பேன்மனோன்மணியே ௨௮

கலாழிபிலிமுகம் கன்னகையும்பொன்னகையும்
காலாட்சமைவேண்டி னடக்குமனோன்மணியே ௨௯

முடியிதினுமகுட முடிசூட்டுவேனற்குணங்
குடிமாதவர்கள்குலக் கொழுந்தேமனோன்மணியே ௩௰

சன்னிதானத்திற் சரணஞ்சரணமென்று
சொன்னமலர்தூவித் தொழுவேன்மனோன்மணியே ௩௧

கற்பூரமேற்றிக் கரத்திபவாலாத்தி
எப்பாரும்போற்ற வெடுப்பேன்மனோன்மணியே ௩௨

முக்காலம்பூசை முடிப்பேன்முக்காலமல்லால்
எக்காலமும்பொங்க லிடுவேன்மனோன்மணியே ௩௩

சாதங்களிகைச்சமைத்துச் சாப்பிராணிதூபமிட்டுப்
பாதந்தொழுதிட்டுப்படைப்பேன்மனோன்மணியே ௩௪

பச்சைப்பருப்புமுதற் பருப்பிற்பத்துவகைகடைவேன்
வைச்சாறுநெய்யுறுக்கி வளர்ப்பேன்மனோன்மணியே ௩௫

முட்டைப்பொரிப்பேன் முழுக்கோழியும்பொறிப்பேன்
றட்டைப்பீக்காளித் றருவேன்மனோன்மணியே ௩௬

ஆட்டுக்கறியுங்கொள்வேனிலனைத்துவகைசமைப்பேன்
கூட்டுக்கறியும்பண்ணிக்கொடுப்பேன்மனோன்மணியே ௩௭

குட்டிக்கறிதானுங் குழம்புபண்ணித்தாளித்தோற்
சட்டிக்கறியேனுந் தருவேன்மனோன்மணியே ௩௮

பால்பழமுந்தேனும் பலகாரவர்க்கங்களும்
மேலுமேலும்பரப்பி விடுவேன்மனோன்மணியே ௩௯

ஆடிக்காயிரம்பொன்விலை யானாலுமீந்துகுணங்
குடிக்குண்மாளிகைகட்டிக் கொடுப்பேன்மனோன்மணியே ௪௰

ஆணிப்பொன்மதிலுயர்ந்த வரண்மனையுந்திர்ப்பாக
மாணிக்கமேவிளக்காய் வைப்பேன்மனோன்மணியே ௪௧

துலங்குமணிமண்டபமுஞ் சொர்க்கமெனவுமிலங்க
இலங்குமலங்காரஞ்செய் திடுவேன்மனோன்மணியே ௪௨

ரத்தினங்கள்வைத்திழைத் திராவைப்பகலாக்குஞ்
சித்திரங்கள்வகைவகையாய்ச் செய்வேன்மனோன்மணியே ௪௩

மண்ணுயமூர்த்தாமல் மனமேமுழுவதினுங்
கண்ணாடியாயிருக்கக் காண்பேன்மனோன்மணியே ௪௪

மங்காதொளிபரப்பும் மௌனமணியாலுமொரு
சிங்காசனமேடை செய்வேன்மனோன்மணியே ௪௫

நாற்காலிகட்டில்பல நற்பலவாகனங்கள்
நீக்கமறச்சுற்றும் நிறைப்பேன்மனோன்மணியே ௬௬

பாதப்பணிந்து பணிவிடைகள்செய்துநிற்க
மாதர்களோரனந்தம் வைப்பேன்மனோன்மணியே ௬௭

புவனத்தரசரெல்லாம் போற்றிப்பணியவென்றன்
மௌனமலரணைமேல் வாழ்வாய்மனோன்மணியே ௬௮

கட்டிலிலுங்கூடி களிகூர்ந்துகொண்டிருப்போம்
தொட்டிலிலுமாடிச் சுகிப்போம்மனோன்மணியே ௬௯

முடிமன்னர்தம்வாழ்வு முதலெவையுமெங்கள்குணங்
குடிமன்னர்தாழ்வுங் கொடுப்பேன்மனோன்மணியே ௭௰

சொன்னமலைமலைபாய்த் தொகைதொகையிலளிக்குங்
கன்னனெனவுமெனைக் காண்பாய்மனோன்மணியே ௭௧

போதகனம்புதுவித்த பொக்கிஷமுங்குவிப்பேன்
பாதத்திலும்வீழ்ந்து பணிவேன்மனோன்மணியே ௭௨

இடையாப்பொருள்களெல்லாங்கிடைக்குமின்னமீயுமென்றும்
படையாப்பொருள்களெல்லாம் படைப்பாய்மனோன்மணியே ௭௩

தானசமுத்திரம்போற் சான்றோர்க்கெல்லாமளிப்பாய்
சேனசமுத்திரமுஞ் சேர்ப்பாய்மனோன்மணியே ௭௪

முடித்தார்க்குமன்னர் முதலெவருமுன்வாயிற்
படித்தாக்கும்வாழ்க்கைப் படைப்பாய்மனோன்மணியே ௭௫

கவிராஜருர்விருது கட்டியங்கள்கூறிநிற்பார்
தவராஜரும்போற்றத் தவறூர்மனோன்மணியே ௭௬

உன்மீதிலாசித் துயிர்பெருஞன்றுட்களிப்ப
என்மீதிலாசையுனக் கிலையேனமனோன்மணியே ௭௭

உள்ளதுரியதெல்லா மொப்படைக்கொண்டபின்னலவோ
கள்ளமனம்படைக்கக் கற்றாய்மனோன்மணியே ௭௮

வேசைக்குணத்தை விருப்புவாயென்றறிந்தார்
காசுப்பணத்தைநான் காட்டேன்மனோன்மணியே ௭௯

படையாதெல்லாமென்றும் படைத்துப்பரதேசிகுணங்
குடியாரையேதேடிக் கொண்டாய்மனோன்மணியே ௮௰

உத்தமிப்பெண்ணென்று வந்தேனிப்போதுன்
பத்தினித்தனந்தைநன்றாய்ப் பார்த்தேன்மனோன்மணியே ௮௧

என்பற்றுனக்கிருந்தா லிராராஜேஸ்வரியாய்
ஐம்பத்தாறுதேசமுநீ யாள்வாய்மனோன்மணியே ௮௨

உள்ளமணவாள னுனக்கெவனோவென்னைவிடக்
கள்ளமணவாளனிச்சை கடிதோமனோன்மணியே ௮௩

வேசியென்றபேர்படைத்து வெளியிற்றிரப்பட்டவளைத்
தாசியென்றுசொல்லத் தகுமோமனோன்மணியே ௬௪

ஆடாதுமாடி யவிசாரியானவளைப்
பாடாதும்பாடிலென்ன பயமோமனோன்மணியே ௬௫

மூக்குமுனைக்குழழும் மூணேனைபத்தினிபோல்
காக்குமுனைக்குழழுங் காலேன்மனோன்மணியே ௬௬

பானைச்சோறெல்லாம் பதம்பார்த்துத்தின்றதினி
மானமழிபிலுயிர் மயிர்தான்மனோன்மணியே ௬௭

இவளைக்காண்டறிந்துகொள் விஞ்ஞானப்பிள்ளையானாற்
றனிக்கண்டபோதுபுத்தி வருகாணமனோன்மணியே ௬௮

பல்லையிசழ்கடிக்கப் பானைதடியொடிக்கக்
கல்லைத்தேங்காகாய்யுடைக்கக் காண்பாய்மனோன்மணியே ௬௯

தடிபோலிருந்தனையாள் சாதிகெட்டபாழுங்குணங்
குடியார்க்கெப்படிக்கூட்டிக் கொடுப்பேனமனோன்மணியே ௭௰

போனதெல்லாம்போச்சுப் பொழுதுவிடிந்ததினி
கானதெல்லாமனத்தி னுடேன்மனோன்மணியே ௭௧

மல்லாந்துநான்படுத்து மார்பிற்றுப்பிக்கொண்டிடினும்
பல்லைக்குத்தியுழகார்ந்தோ பார்ப்பேன்மனோன்மணியே ௭௨

என்னைவிட்டால்மாப்பிளைமா ரெத்தனைபேரொன்றனுக்கே
உன்னைவிட்டாற்பெண்ணெனக்கு மூண்டோமனோன்மணியே ௭௩

தடித்தனமேசெய்தாலுஞ் சமுசாரத்திற்படிந்து
குடித்தனமேசெய்தாலென்ன மனக்குறையோமனோன்மணியே ௭௪

கொடுத்தணைத்துக்கொண்டே துயில்வன்மற்றநேரமெல்லாம்
எடுத்தணைத்துக்கொண்டே யிருப்பேன்மனோன்மணியே ௭௫

படுத்துப்படுத்துநெஞ்சிற் பளிச்சுப்பளிச்செனறமுத்தங்
கொடுத்துக்கொடுத்துநான் கொள்வேனமனோன்மணியே ௭௬

வன்னச்செழு பவள வாயிதழாச்சுவைத்துன்
கன்னத்தில்வீழ்ந்து கடிப்பேனமனோன்மணியே ௭௭

கச்சிறுக்குமாதரின்பங் கைச்சிறுக்குபோதேவின்பம்
வைச்சிறுக்குங்கொங்கையிற்கை வைப்பேன்மனோன்மணியே ௭௮

இக்கித்தொழுதுங்காம தேனமிர்தவூறலுண்பேன
முத்தித்தழுவித்தழு முகப்பேன்மனோன்மணியே ௭௯

படியோர்க்கெல்லாமுயன்ற படிபோர்களானகுணங்
குடியோர்கள்போலுமின்பங் கொள்வோம்மனோன்மணியே ௮௰

சேயாயுயென்மடியிற் செங்கீரையாடியருட்
டாயுமன்னைக தருவாய்மனோன்மணியே ௮௧

அங்கைத்துதிக்க ளிணைத்தணைக்கா ருள்ளமிர்தங்
கொங்கைதந்துதந்தே கொடுப்பாய்மனோன்மணியே ௮௨

தாவியணைத்தணைத்தென் றாகவுனையென் றிங்கப்
பாவிமடியில்வைத்துப் பார்ப்பேனமனோன்மணியே ௮௩

ஏங்கியழுவேனோ உன்னிணையடியைக்காணாமற்
ஆங்கியிழுவேனோவென் றேழைமனோன்மணியே ௮௪

உலைபோலெரியுமென்ற னுளங்குளிரமேல்வளர்ந்த
மலைபோலெழுந்தருளி வருவாய்மனோன்மணியே ௮௫

கன்மமறுப்பதெந்தக் காலமோயானறியேன்
நன்மைதருவதெந்த நாளோமனோன்மணியே ௮௬

பன்னீரொழுகுமுன்றன் பாதமலரையென்றன்
சென்னிமீதன்றிமலருள் செய்வாய்மனோன்மணியே ௮௭

தாயினுமிக்காங்கருணைத் தயாநிதியேயிவ்வுரையை
நாயினுமிக்காங்கடையே னவின்றேனமனோன்மணியே ௮௮

கால்பிடித்துக்கண்ணில்வைத்துக் கைகுவித்துமெய்மயங்கி
மால்பிடித்துச்சொன்னசொல்லை மகிழ்வாய்மனோன்மணியே ௮௯

அடியானையுன்னடியார்க் கடியானுமாக்கிநுணங்
குடியானெனப்பிரிடங் கொடுப்பாய்மனோன்மணியே ௯௰

உச்சிதவச்சிரமலையே யொப்பொன்றிலாமாணிக்கம்
கச்சிதப்பச்சை மரகதமேமனோன்மணியே ௯௧

செப்புறுமாணிமுத்தே சிறந்தபவளக்கொடியே
புட்பராகக்கமலப் பூவேமனோன்மணியே ௯௨

கோமேதகமே குளிர்ந்தவயிடூரியமே
மாமேருவேநீல மலையேமனோன்மணியே ௯௩

வற்றாவருட்செல்வ வாழ்வேகருணைநிதியே
பொற்றாமரைக்கமலப் பொகுட்டேமனோன்மணியே ௯௪

அல்லிமலரேயலர் செங்கழுநீர்மலரே
மல்லிகைகொத்து மலரேமனோன்மணியே ௯௫

பொன்மலரேபன்மலரே புகழ்தருபன்னீர்மலரே
மன்மதபாணமே மலரேமனோன்மணியே ௯௬

குடலைநிறைந்ததொரு கொத்தலரிச்செம்மலரே
மடலவிழ்ந்தசெந்தாழை மலரேமனோன்மணியே ௯௭

பூர்க்குமருண்மலரே புளிக்காதமாமலரே
வாக்குமலரே கண்மலரேமனோன்மணியே ௯௮

வஞ்சியர்செய்மோசமுடன் மறலிசெய்நாசத்திற்கும்
அஞ்சியுனக்கடிமை யானேன்மனோன்மணியே ௯௯

அடியாரும்வாழிபிங்க லடியேனும்வாழிகுணங்
குடியாரும்வாழி குணக்குன்றேமனோன்மணியே ௱

மனோன்மணிக்கண்ணி முற்றிற்று - ஆகப்பாடல் - ௬௮௰

---

## உமையாள்பாதம்முன்னிற்க.

ஆதியந்தங்கடந்தவுமையாடன்பாதம்
அகண்டபரிபூரணமாமையர்பாதந்
சோதியந்தங்கடந்தகணபதியின்பாதந்
தொழுதிறைஞ்சிக்கரங்குவித்துப்போற்றல்செய்து
வாதியந்தங்கடந்தநந்திபாதமென்றும்
வாலைதிகர்வாணிமனோன்மணிபாதமென்றும்
ஓதியந்தங்கடந்தகண்டமிரண்டதாக
ஒன்றுமறியாவறிஞனுரைசெய்தானே

---

## ந ந் தீ ஸ் வ ர க் க ண் ணி.

ஆதியந்தங்கடந்தவுமையாளருளாகக்
சோதியந்தங்கடந்தசெழுஞ்சுடரேநந்தீஸ்வரனே ௧

முடியடியாய்நின்றநடு மூலமணிவிளக்கே
அடிமுடியாய்நின்றநடு வணையேநந்தீஸ்வரனே ௨

கர்த்தனேயானுன்கருணைத்திருவடிக்கே
எத்தனைதான்றெண்டனிட்டேனந்தீஸ்வரனே ௩

நிர்க்கதென்றடைவிட்டேன்றிருவடியைப்போற்றிசெய்தேன்
வாக்குநடிக்கவரமருளாநந்தீஸ்வரனே ௪

நாசிப்பரவெளியே மௌனமணிமாளிகையில்
வாயிற்பெருவழியே யகத்தேநந்தீஸ்வரனே ௫

சகத்தோனேஞான மணமழையேயருள்வெள்ள
மழுகத்தோனேமோன முனையேநந்தீஸ்வரனே ௬

ஞானப்பிள்ளைபெற்ற நல்லசமுசாரிகட்கு
மோனமறையுந்நழுவிலேநந்தீஸ்வரனே ௭

முப்பூலையோ முறைதஞ்சித்திசெய்துதர
உணர்வேலாகுழவியேநந்தீஸ்வரனே ௮

சமர்கொடுத்துவென்றோங்கு சாம்பவிகைக்கைப்படுத்தி
தவர்விடுத் தகீக்கத் தருவாய்நந்தீஸ்வரனே ௯

நல்லோர்க்குநாட்ட நல்லரணஞ்சுடிவாழ்
வெல்லோர்க்குநோகாட்ட வெளித்தோநந்தீஸ்வரனே ௰

இல்லினிடக்கூட்டி யிசழ்விரியுஞ்செங்கமல
லல்லனிடங்காட்டி வைப்பாய்நந்தீஸ்வரனே ௧௧

சாமிகனையுஞ்சுத்தசைதன்னியமானசிவ
காமிதனையுமென்று காண்பேநந்தீஸ்வரனே ௧௨

உமையாளுமெய்யா யுவங்சடிமைகொள்ளூர்வண்ணம்
ஏமையாளுமெய்யா விறையேநந்தீஸ்வரனே ௧௩

கேசரத்தைக்காட்டிக்கிளரொளியாடென்னருட்பால்
ஆசரித்தேவூட்டலருள்வாய்நந்தீஸ்வரனே ௧௪

சத்திசிவமுதலாய்ச் சாம்பவியர்பாளருளில்
செத்தசிவமுதலாய்ச் சித்தாப்நந்தீஸ்வரனே ௧௫

சிற்றளையின்றசிறுபெண்ணுத்தாளிரண்டு
பொற்றளையென்றே புணர்வேநந்தீஸ்வரனே ௧௬

பத்துவயதுடைய பாவையரேயன்றேநீ
சித்தர்க்கெல்லாந்தாயாகச்செய்தாய்நந்தீஸ்வரனே ௧௭

காமரூபியைசித்திப கல்யாணசுந்தரியை
ஓமரூபியையியற்குமூதவுநந்தீஸ்வரனே ௧௮

கேசரிபாடன்கருணைகிட்டின்றோவாசாம
மோகாசரவாழ்வெல்லாங்கொடுப்பாய்நந்தீஸ்வரனே ௧௯

அல்லவொளிகூட்டிமோனக்குணங்குடிக்கும்
மேலைவழிகாட்டிவிடுவாய்நந்தீஸ்வரனே ௨௰

கண்டப்பாலக்கடத்திகமலாசனத்தேற்றி
அண்டப்பாலுங்கொடுத்தேயருள்வாய்நந்தீஸ்வரனே ௨௧

செங்கமலபீடச்செல்வியர்காஞ்சித்தம்மைத்தாற்
றங்கமலைகூடத் தருவாணந்தீஸ்வரனே ௨௨

போதகத்தைப்பூட்டிப்புருவமைத்தாயெற்கும்
வாதவித்தைக ட்ட வருவாய்நந்தீஸ்வரனே ௨௩

ரசயோகசித்துனயனருளினலடிமை
நிசயோகமுற்றுநிலைப்போநந்தீஸ்வரனே ௨௪

மகாவித்தைகாய்ப்பதற்கு மகியமிர்தவூரலுண்டே
லகிரியுற்றுநிற்பதற்குவைப்பாய்நந்தீஸ்வரனே ௨௫

குப்பைபவழலையென்னுங்கோவையெல்லாங்கக்கவைத்துக்
கற்பவழலைவரக்காட்டுநந்தீஸ்வரனே ௨௬

சற்பவழிவரக்காட்டி கற்பமுண்டதற்பின்
கற்பவழிமுறை பகர்வாய்நந்தீஸ்வரனே ௨௭

சூகமுகனீற்றிச் சொன்மதியமிர்தப்பிர
அமதிலூற்றித் தருவாய்நந்தீஸ்வரனே ௨௮

கற்பதேகமதாயடியேனெடுத்தவுடல்
கற்பதேகமதாய்க் கணிப்பாய்நந்தீஸ்வரனே ௨௯

உனைநம்பினோர்வாழ மோங்குருணைக்குடியார்க்
கெமனுப்பினையாரு மெதிரோநந்தீஸ்வரனே ௩௰

முனீஸ்வரரென்றும் முடிக்கருள்வாயாகிலென்னை
ஈசீஸ்வரர்கூடச் சாட்டாய்நந்தீஸ்வரனே ௩௧

காலனும்போய்விடுவான் காலங்கடந்தசிறு
பாலனுமாய்விடுவேன் பரமேநந்தீஸ்வரனே ௩௨

கலைமணிமுதலாய்க் கட்டியென்னைக்களிக்க
மௌனமணித்தாய்க்கு வகுப்பாய்நந்தீஸ்வரனே ௩௩

மாயைவலைவீசி மயக்காமன்மாயைக்கென்மேல்
நேயவலைவீச நிகழ்த்துநந்தீஸ்வரனே ௩௪

தோகையிளமின்னார் சுகபோகமும்பசியும்
போகவழிசொன்னாற் போதும்நந்தீஸ்வரனே ௩௫

பெண்ணையுலகமெல்லாம் பிணக்காடாக்கினையோ
மண்ணைமடிவதென்ன மாயர்நந்தீஸ்வரனே ௩௬

சையோகப்பித்தையெல்லா சார்க்கோடுகச்சைகட்டு
மெய்யோகப்புத்திசொல்ல வேண்டும்நந்தீஸ்வரனே ௩௭

பாஷாண்டிகளோடும் பலனொன்றுமின்றிவெறும
வேஷாண்டியாக்கி விடுக்கணந்தீஸ்வரனே ௩௮

பிணம்பிடுங்கித்தின்னும் பேய்போற்சிலநரையர்
பணம்பிடுங்கித்தின்பதென்ன பாவம்நந்தீஸ்வரனே ௩௯

பணமுடியானென்றும் பவாபிடியானென்றுமெனைக்
குணக்குடியானென்றுங் குறிப்பாய்நந்தீஸ்வரனே ௪௰

உன்னையன்றியேழை யோரொருவரையும்
அன்னையென்றுமாள வருள்வாய்நந்தீஸ்வரனே ௪௧

ஆத்தாளைத்தேடி யலைந்தாடிப்பறக்குங்
காற்றாடியானேன் கண்ணேநந்தீஸ்வரனே ௪௨

மான்பிரிந்தகன்றாய் மயங்குதற்கென்றாய்வயிற்றி
லேன்பிறந்தகன்றே யிருந்தேநந்தீஸ்வரனே ௪௩

ஏறுவெனையிரா வென்றாயிவ்வாறுசெயத்
தானேவினுமென்செயத் தானேநந்தீஸ்வரனே ௪௪

தாய்தாயேயென்றே தலைப்புரட்டக்கொண்டுவெறு
வாய்வாயைமென்றோ மடிவேனந்தீஸ்வரனே ௪௫

தாயைவிட்டுப்பிள்ளை தவிப்பதறிந்தவுடன்
சேயையிஷ்டப்படைத்தணைக்கச் செய்யுமநந்தீஸ்வரனே ௪௬

கன்றதனுக்கேயிரங்கும் காலிதனையென்மனத்தாம்
என்றனுக்கிரங்க விசைப்பாய்நந்தீஸ்வரனே ௪௭

மாயைபணமுடித்து மயக்காதெனையீன்ற
தாயைமணமுடித்துத் தருவாய்நந்தீஸ்வரனே ௪௮

தற்பரத்தினல்வெளியே சர்வபரிபூரணமே
சிற்பரத்தினொளியே சிவனேநந்தீஸ்வரனே ௪௯

முக்தமெலாம்வாழிலெங்கள் மோனமணித்தாயருளுஞ்
சித்தமெல்லாம்வாழிசுத்த சிவமேநந்தீஸ்வரனே ௫௰

குற்றம்பலநீக்கிக் குணக்குடியென்றிருமேவுஞ்
சிற்றம்பலம்வாழி சிவனேநந்தீஸ்வரனே ௫௧

நந்தீஸ்வரக்கண்ணி-முற்றிற்று.



தனி.

கட்டளைக்கலித்துறை.

மடக்கிமடக்கிவருமாயினுஞ்சொல்லுமாண்பொருளோர்
அடக்கியடக்கிக்கிடக்குமவண்டர்பலனுய்ந்துகொள்வார்
நடக்கினுமாமனவுண்மையினுள்ளிடையொழிந்து
இடக்கினுமாமென்றறிதாநொடிக்கிளர்த்தியதே.

ஆகபாடல்-௩௩௩.



பிசுமில்லா இற்றகுமா னிற்றகீம்.

மஸ்தான்சாகிபு அவர்கள்பாடிய

கீர்த்தனங்கள்.



௧-தரு இ-ம்-புன்னாகவராளி-ஆடதாளசாப்பு.

பல்லவி.

பாமுக்கள்குணங்குடிசெருசில்வநூர்பலவனி
பார்த்தவநீவாம்வாருங்கள்

சென்றவிடஞ்செயந் தானேதன்னைக்
கண்டுகொண்டுலாயிலா இல்லல்லாகு

௨. கெட்டமனதையுடைய வெறுமைக்
கிடாவினைப்போலவு முண்டோ-காசைக்
கட்டிப்புதைத்துக்கடையிற்சாகின்ற
கழுதைகட்குப்பல னுண்டோ-சுத்த
மட்டிப்பயல்களமனக்தைக்களைக்க
மருந்துகள்மாத்திரை யுண்டோ-லகு
சட்டமதாகியநிஷ்டையிராத
சண்டாளர்க்குச்சாஸ்திர முண்டோ-இந்தத்
துஷ்டரைப்போலவு முண்டோ-நீ
கெட்டியுடனலாயிலாக இல்லல்லா

௩. இல்லல்லாகூவென்றேருணிராமல்
இணைபடவுமிருந் தேனே-மெத்த
நல்லநோன்புடன்றொழுகையும்விட்டு
நலங்களையுமறந் தேனே-நன்னே
வெல்லுக்குநபான்சொல்லிடதீக்ஷை
வினவாமல்விட்டிருந் தேனே-அதை
அல்லும்பகலுமறியாவெவனுனள்
ஆயாசமாக்குவித் தேனே-இது
எல்லாமறிந்திடுந் தானே-சொல்லுஞ்
சொல்லுஞ்சொல்லும்லாயிலாக இல்லல்லா

௪. பூசைகள்செய்கிறேனென்றுதிரிந்து
புலம்பிபபாபமும் போக்கி-பெண்கள்
ஆசையினாலேயனேகந்தரங்கள்
அடிபட்டதும்லகு லாக்கி-பெங்கள்
ஈசன்றிருவடியாசையுள்ளானபின்
என்னைக்கையாலவர் தூக்கி-அந்தத்
தேசழித்தனக்கடொலையத்தொழுகல்
லுனைகளைப்போசனை யாக்கி-கெட்ட
பாசங்களைவிட்டு நீக்கி-தந்த
வாசியுடன்லாயிலாக இல்லல்லா

௫. எண்சாணுபாத்திருக்கும்பனங்க
ளிறக்கியுண்ணேனென்டனக் கண்ணே-கெட்ட
கஞ்சாவுங்கள்ளுநாக்குமயினுங்
கலப்பதைவிடுவெறு மண்ணே-நீ
தஞ்சாவூராளுமகாராஜன்பாதந்
தணிந்துநமஸ்காரம பண்ணே-என்றன்

கொஞ்சப்பெலனுள்ள காயாபுரி
கோட்டைபிடித்திடு மெண்ணே-அவர்
அஞ்சாதிடிப்பரென் றெண்ணே-இனிக்
கொஞ்சிக்கொஞ்சிலாயிலாக (இல்லல்லா)

௬. என்னவிதமென்று சொல்வேன்முழங்க
முழங்குவதென்னுக்குள் ளாலே-ஒரு
அன்னமிருந்தே யழகுபிறக்க
அசைந்தசைந்தாடு தாலே-அதன்
முன்னாலேயான்செய்த பாக்கியங்கண்டு
மூன்றாசையிலலாத தாலே-அது
தன்னாலேயானந்த வெள்ளம்பருகித்
தடையறப்பாயுற லாலே-பயிர்
அன்னம்பிடிபபத னாலே-உனக்
கென்னகுறைலாயிலாக (இல்லல்லாகு)

௭. வாசனையாகிய மாசத்துவஸ்துவும்
வாக்குமனதுக் கெட்டாதே-அதில்
ஆசைக்கடல்பொங்கி யோசையுடனலை
ஆடிடுமென்றுங் கட்டாதே-இந்த
நாசச்சரீரத்தை வாசியிற்றீற்றிடில்
நாசத்தையண்டவொட் டாதே-நல்ல
யோசனைசெய்யுங் குணங்குடிவந்திடில்
யோகமுனக்குங்குன் றாதே-ஒரு
மாசறையாகூவென் றாதே-காசில்
ஆசைவிட்டேலாயிலாக (இல்லல்லா)

௩-தரு-இ-ம்-பந்துவராளி-சாப்புதாளம்.

பல்லவி.

பெண்கொண்டபேர்பட்ட பாட்டையுங்கேட்டையும்
பேசுவோமேநெஞ்சமே

அநுபல்லவி.

சங்கையும்போக்கிச் சதிமானமாகச்
சகசண்டியாக்குவித திடுவாள்-வெகு
பங்கப்படுத்திவிட் டிடுவாள்-அந்த
மங்கையராசைவைத் தையையோவையத்தில் (பெண்)

சரணங்கள்.

௧. தங்கநகையுமுகப்பணியுஞ்சேலையும்
தாவெனவேகுரங் காட்டுவாள்-என்றன்
செங்கைவளையுந் தலைக்கெண்ணெய்சிப்புஞ்
உ௰

சிறப்போடுதாவென மாட்டுவாள்-வன்னக
சொங்கைக்கிசைந்தரவிக்கையுங்கோலப்
பணியுங்கொடுவென மூட்டுவாள்-அட்
வெங்கப்பயனீயனுமக்கனேவென்று
வீட்டில்வாராதேயென் றேட்டுவாள்-வெகு
பங்கப்பழிப்பினி னூட்டுவாள்-அந்த
மங்கையராசைவைத் தையையோவையத்தில் (பெண்)

௨. ஆதியைத்தேடி யருள்பெறநாடில்
அழுதழுதுமடி பிடிப்பாள்-நீதான்
ஏதென்னைவிட்டுப் பிரிவதுமென்றவள்
ஏங்கியேங்கித்துடி துடிப்பாள்-இன்னும்
வாதாநீசெய்யுந் தவம்பலியாதென்
வாழ்த்திவசைகொடை கொடுப்பாள்-கெட்ட
மூதேவிபுத்தி படைத்தவளாகி
மூரணுக்குமாரடி துடிப்பாள்-வெகு
வேதனையாய்மட மடப்பாள்-அந்த
வாதிகளாசைவைத் தையய்யோவையத்தில் (பெண்)

௩. நாடிக்குருவடி தேடிநடக்கின்ற
நற்செயலைகசப் பாக்குவாள்-எங்கும்
ஓடித்திரிந்தே யலைந்துபணங்கள்
ஒருகாலேதேடென்று தாக்குவாள்-அவன்
தேடும்பொருடனைக் காணினுமக்கெதிர்
தேசத்திரையென்று தூக்குவாள்-இன்னும்
ஆடென்றும்மாடென்றும் வீடென்றுந்தேடென்றும்
ஆண்டவனைமறப் பாக்குவாள்-பின்பு
ஈடொன்றிலாகினை யாக்குவாள்-அந்த
கேடிகளாசைவைத் தையையோவையத்தில் (பெண்)

௪. நீராட்டமாடி மையிட்டுப்பொட்டிட்டு
நிறம்பவுடைமைக ளிடுவாள்-வந்து
போராட்டமாகவே சீராட்டஞ்செய்துன்றன்
புத்தியைப்போக்கடித் திடுவாள்-பின்பு
பாராட்டம்பண்ணியுன் றன்னையும்விட்டுப்
பலர்முகம்பார்த்தவள் கெடுவாள்-சுத்த
மாராட்டமாகுமனந்தெளியார்க்கு
மருண்மழையேபொழிந் திடுவாள்-கெட்ட
சிராட்டியாய்வந்து முடிவாள்-அந்த
காரிகளாசைவைத் தையையோவையத்தில் (பெண்)

## ஆசிரியவிருத்தம்.

பாடையிலேதுறவடைந்துபரமடைந்தகுணங்குடியார்பகர்ந்தஞானம், பாடையிலே துறவடைந்து பரமடைந்தானந்தசுகம் படைத்திடாரைப், பாடையிலேபோட்டுமீடு காட்டிவிடப்படுமுனையும் மலமருந்தப், பாடையிலே போட்டெடுக்க நாள்வருமென்றறிந்திலையே பாவிநெஞ்சே.

ச-தரு-இ-ம்-கலியாணி-சாப்புதாளம்.

பல்லவி.

எத்தனையாட்டநீ யாடினும்பதைப்பற் றிருந்திடுவாய்நெஞ்சமே

அநுபல்லவி.

பத்திசற்றேனும் படைத்தாயெனிலந்தப்
போதனையேயுனைத் தேற்றும்-மூன்று
வாதனையுமற மாற்றும்-யோக
சாதனைமீதினு மேற்றும் (எத்தனை)

சரணங்கள்.

௧. நற்றவஞ்சித்திக்கு முத்திதருந்தச
னாதத்தையுஞ்சித்தி யாக்கும்-கட்டிற்
சுற்றுவறுதல்க்கட்டுயவிழ்ந்திடச்
சோடசப்பின்னலை நீக்கும்-பாயும்
பத்தோடிரண்டு கலையுமெட்டாகப்
பராபரமும்முகம் பார்க்கும்-நல்ல
சுத்தமயப்படி கற்சுயஞ்சோதிச்
சுழுமுனையுந்தலை காக்கும்-எமன்
உத்தியோகந்தனைப் போக்கும்-வந்து
சவற்றிக்குணங்குடி வாய்க்கும் (எத்தனை)

௨. தாற்பசுதன்னை வெளியிடாமலுங்
கட்டித்தொழுவினின மாட்டும்-வீட்டிற்
பாற்பசுவைப்பக்குவத்துடன்வைத்ததன்
பாலைக்கறந்துனக் கூட்டும்-ஏழை
போற்பசுதன்னையும் போக்கித்தபசுக்குப்
போவென்னநேர்வழி காட்டும்-அதன்
மேற்படக்காலா லுதைத்துஉரைத்தின்னும்
விட்டேனோவென்றுகை நீட்டும்-உன்றன்
பாற்படியாயையுஞ் சாட்டும்-மாட்டை
யேய்ப்பக்குணங்குடி யோட்டும்(எததனை)

௩. வஞ்சமறவிரவிடுதூதன்
வஞ்சியாராசைவிட் டோட்டும்-மெத்தப்

பிஞ்சப்பழங்கந்தை யானம்மாயைடயப்
பேயர்தலையினிற் போடும்-நாளும்
தஞ்சமென்றன்குரு நாதன்றிருவடி
தன்னைத்தொழுதிட நாடும்-இனி
என்செயலேது மில்லையென்றவரிடம்
ஏங்கியேங்கிநையம் பாடும்-நின்று
அஞ்சாமலஞ்சியே * வாடும்-மிக்க
கொஞ்சிக்குணங்குடி தேடும் (எத்தனை)

ச. இடைபிங்கலைக்கிடை யில்லடைவுஞ்சுழி
எளிதிற்றடையற மீறும்-பாயும்
மடைகண்டுவரு மதியமுதமுட்கொண்டு
வரவரக்காயமுந் தேறும்-இந்த
உடலோடிருந்துதபம் செய்யவுங்கற்பம்
உண்டெடமகண்டமும் மாறும்-பின்பு
குடங்கவிழ்நீரென்ன நீசெய்பவங்களும்
கொண்டுண்டுமண்மீது சாறும்-உனைத்
தொடரிருவினைவெந்து நீறும்-அருள்
படருங்குணங்குடி யேறும் (எத்தனை)

ரு. ஆதாரமாறினுஞ் சேதாரம்வாரா
தடுக்கடுக்காகவே விடுக்கும்-எமன்ம
பாதைபார்த்துநிற்குங் கண்டமெனுமயிர்ப்
பாலத்தையுமெள்ளக் கடக்கும்-பின்பு
காதுகண்ணுக்கொடு மூக்குமொன்றாகக்
கவிந்துமஞ்ஞானத்தை யடக்கும்-என்றுஞ்
சுதானமாகிய வெட்டவெளிசென்று
சொக்கியமயக்குண்டு படுக்கும் குரு
நாதனருளடை கிடக்கும்-பரஞ்
சோதிகுணங்குடி யடுக்கும் (எத்தனை)

சு. உந்தியின்கீழ்நன் றுதித்தசுழிமுனை
ஓங்காரக்கோதண்டம் பிடிக்கும்-வருஞ்
சந்திரன்சூரியன் மேல்வைத்துத்தாக்கிச்
சமர்பொருதுஞ்ஜெயம் படைக்கும்-சற்றே
குந்தியிருந்திளைப் பாறித்தெளிந்து
குசாலாகச்சாய்ந்தங்கே படுக்கும்-அதற்
கந்தியுஞ்சந்தியு முச்சிமுக்காலமும்
ஆதரித்துப்பூசை நடக்கும்-தேவ
இந்திரன்போனின்று நடிக்கும்-இங்கே
வந்துகுணங்குடி கொடுக்கும் (எத்தனை)

௭. சொல்லித்திரிதற் கறிவுகற்றதோஷ
தோஷத்தைநாசற லாக்கும்-கற்றும்
நல்லவறிவற்ற புலையரைக்காண்கி
னடுக்கியுடலெங்கும் வேர்க்கும்-மலை
கெல்லியெலிபிடித்ததைபோற்காசுக்
கேயலையாதுனைக் காக்கும்-பாயும்
வல்லயம்போல வருமாயையாஞ்சண்டி
மாட்டுக்குமாசண்டி யாக்கும்-கரு
நெல்லிக்கனிகைக்குள் வாய்க்கும்-அருள்
முல்லைகுணங்குடி பூக்கும்(எத்தனை)

௮. காமக்குரோதக் களையைக்களைந்து
கடுஞ்சுழிக்காற்றிலே தூற்றும்-யோக
பூமிக்குள்மோன வித்தைப்பதித்துப்பரி
பூரணமாய்ப்பயி ரேற்றும்-மேற்
சோமன்மதிவட்ட மீதுசுழிமுனை
சொக்கித்தெளிந்திடத் தேற்றும்-தாயை
வாமம்வைத்துப்பூசை பண்ணிப்பணிந்திட
வாரியமிர்தத்தை யூற்றும்-நல்ல
நேமத்துடனுனைப் போற்றும்என்றும்
நேமக்குணங்குடி யேற்றும்(எத்தனை)

௯. இல்லந்துறந்து வரும்பலதொல்லைகள்
எல்லாமெடுத்தெடுத் தெரியும்-மூடும்
வல்லிருளாகிய மாமாயைதந்த
மயக்கம்விட்டுவிட்டுப் புரியும்-ஒரு
எல்லையிற்பேரின்ப வெள்ளப்பெருக்கில்
எடுத்தாண்டுந்தன்வயிர் நிறையும்-பின்பு
அல்லும்பகலுஞ்சு கானந்தநிஷ்டையிற்
அண்டமும்பிண்டமுந் தெரியும்-எங்கும்
சொல்லுமருண்மழை சொரியும்-மெத்த
நல்லகுணங்குடி புரியும்(எத்தனை)

௰. கூசிக்குலாவு மடவாரைக்கொஞ்சிக்
குலாவாமலுங்கையை விரிக்கும்-வன
வாசத்துக்கேகித் தவம்புரிதற்கிச்சை
வைத்தனுவைத்துத்துடி துடிக்கும்-கெட்ட
ஆசைபசாசைத் துரத்தித்துரத்திவந்
தண்டவொட்டாமலே யடிக்கும்-ஞான
தேசிகன்பாதார விந்தத்தையேமோனச்
சின்முத்திரையாகப் பிடிக்கும்-உப

தேசித்துச்சுரைப்பந் தடிக்கும்-நமக்
கிசன்குணங்குடி கிடைக்கும்(எத்தனை)

௰௧. செத்தாலும்வைத்தடி வாங்காமனிற்கின்ற
தீரத்தைதயேதிர மாக்கும்-சற்றும்
மெத்தாகிபுத்திவங்தெற்றுமனுன்றனை
மேவிவிழுந்துகை தூக்கும் எங்கள்
சித்தாதிகட்கருள் செய்தநன்முத்தியுஞ்
சித்தியும்வெற்றியும் வாய்க்கும்-நின்று
எத்தாலிளிப்பிழைப்போ மெனவெண்ணுமல்
எங்கோனருட்பாது காக்கும்-ஒரு
பித்தபவங்களைப் போக்கும்-மோன
வித்தைகுணங்குடி வாய்க்கும்(எத்தனை)

௰௨. எண்ணுதவெண்ணத்தி லூடேபலர்த்தெழப்
இன்பவினோதத்தை விட்டும்-கெட்ட
மண்ணைமூவாசை மண்ணுகவுநல்ல
மானபிமானத்தை யோட்டும்-என்றன்
கண்ணேமணியேயென் கண்ணுதலேயெனக்
கண்ணீருமுண்ணீரு மூட்டும்-பின்பு
தண்ணீருமண்ணுங் கலந்ததுபோற்சிந்தை
தத்தளிக்கநிலே நாட்டும்-நடம்
பண்ணும்பரவெளி சூட்டும்-உய்யும்
வண்ணக்குணங்குடி காட்டும்(எத்தனை)

௰௩. வித்தகனூர்சொன்ன புத்தியின்மாயையை
வேங்கைபுலியெனச் சாடும்-நம்மை
வெற்றிகொண்மாதர் முயக்களற்கேணி
வீரிவோடவுங்காயப் போடும்-உன்னைப்
பெற்றூர்பிறந்தார் சுற்றத்தார்முதலான
பித்தர்க்கெல்லாமுகம் வாடும்-நல்ல
பத்தரைமாற்றுப் பசும்பொன்னையொத்த
பரவொளிப்பம்பா மாடும்-மேலுங்
கர்த்தனருளுங்கை கூடும்-நாளுஞ்
சித்துகுணங்குடி யாமே(எத்தனை)

௰௪. எங்குநிறைந்த பெரும்பொருளென்னுள்
இருந்துகொண்டேவிளை யாடும்-ஒரு
கங்குங்கரையறப் பொங்கிப்பரவிக்
கருணைக்கடல்வந்து மூடும்-அருள்
வங்கமுந்தங்காம லிங்குவந்தென்னை
மகிழ்ந்தெடுத்தேற்றிக்கொண் டோடும்-நாளும்

மங்காததங்கமௌனப்பொருளு
மலைமலையாகக்கை கூடும்-இன்னும்
பங்குகொடுக்கவு நாடும்-யோகம்
தங்குங்குணங்குடி சூடும்(எத்தனை)

௰௫. வாசாமகோசா வான்பொருளென்றன்
மடிமீதுசெங்கிரை யாடும்-மோன
தேசிகன்பாதார விந்தந்தெய்வத்தை
தெய்யெனக்கூத்துகள் போடும்-எங்கள்
ஈசன்றிருவருடாணைகொட்டிப்போர்
இன்பக்கோலாகலம் பாடும்-எம
பாசமறுத்துக்கொண்டென்னச்சுமட்டமும்
யாய்ந்துமடமடென் றோடும்-கோட்டை
வாயிற்கடந்துட்சென் றுடும்மயிலே
பேசுங்குணங்குடி (கூடும்-எத்தனை)

---

கொச்சகம்.

ஐயையோவென்விதியை யாரிடத்திற்சொன்னாலும்
ஐயையோவென்றே வருங்கவலைகொள்வாரதம்
ஐயையோ வையகத்தி லாருமிலையுன்னையன்றி
ஐயையோவடிமையக் கையணைப்பாய்குருபரனே.

---

௫-தரு-இராகம்-பைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

ஐயையோநானென்செய்வேன்-என்விதிவசம்
ஆருடனேசொல்லியழுவேன்

அநுபல்லவி.

மெய்யெடுத்துப்பொய்யாய் வீணாட்கழிந்துபோச்சு
பொய்யிலாதவென்னை யாருளறு
கையுமெய்யுமாகக் கண்ணிற்காணேனே (ஐயோ)

சரணங்கள்.

௧. பார்க்கப்பலவிதமறைவாய்ச் சமையலான
பதினாலுலோக நிறைவாய்
வாக்குமனமுமதி நோக்கமதுவாய்நின்றுந்
தீர்க்கமாயறியாமற் றேடியே
பார்க்குள்ளேயலைந் தலைந்துகாணேனே(ஐயோ)

௨. முன்னோர்கள்செய்திடுபாவலாபமோபாதகமோவென்
மூதேவித்தனங்கொள்பிர தாபமோ
என்னகொடுமைகளோவென் றலைவிதிதானோ
இன்னபேதமில் லாதசோதியை

இன்னமென்னுட் கண்ணிற்காணேனே (ஐயோ)

௩. ஆசபாசங்களெல்லாத்தையும் அனுதினம்
ஆனந்தவெள்ளத்து ளகப்பட்டும்
ஓசைமணிபூரகத் துள்ளெங்குந்தேடியும்
வாசமொய்த்த குணங்குடிப்பா
தேசியெயத்து மிளைத்துக்காணேனே (ஐயோ)

௬ - தரு - இ - ம் - கேதாரகௌளம் - ஆதிதாளம்

பல்லவி.

சூத்திரப்பாவைக் கயிறற்றுவீழுமுன் சூட்சக்கயிற்றினைப்பாரடா
அதி சூட்சக்கயிற்றினைப் பாரடா

அநுபல்லவி.

நேத்திரமிரண்டினு நேரேயிலங்கிய
நீடொளிபோன்றது தேடரிதாகிய
காத்திரமுள்ளதும் யாவும்பொதிந்தது
கையினுங்காலினு மெட்டப்படாததோர் (சூத்தி)

சரணங்கள்.

௧. சாத்திரவேதஞ் சதகோடிகற்றாலும்
சமயநெறிகளினுசாரம் பெற்றாலும்
பாத்திரமேந்திப் புறத்திலலைந்தாலும்
பாவனையாலுடலுள்ள முளைந்தாலும்
மாத்திரைப்போது மெம்வருமப்போது
மற்றொன்றுதவாதுதவா துதவாது
சூத்திரமாகிய தோணிகவிழுமுன்
கக்காளைநேர்படுத் திக்கணமேசொன்னேன் (சூத்தி)

௨. உற்றுறவின்முறையார்சூழ்ந்திருந்தென்ன
ஊருடன்சனங்களெல்லாருமபணிந்தென்ன
பெற்றாரும்பெண்டீரும் பிள்ளையிருந்தென்ன
பேணும்பெருஞ்செல்வவாணவத் தாலென்ன
கர்த்தன்பிரிந்திடுற் செத்தசிவமாச்சு
காணுதுகாணுதுகண்டோரெல்லாம் போச்சு
எத்தனைபேர்நின்று கூகுரலிட்டாலும்
எட்டாமற்போய்விடுங் கட்டையாலோவிந்தச் (சூத்தி)

௩. மாயப்பிறவி வலையையடைத்திட
மாறாத்தியானமனத்தி னினைத்திட
காயாபுரிக்கோட்டை கைக்குளகப்பட்ட
காணும்மணிச்சுடர்தானே விளங்கிய
ஆயுமறிவுடன் யோகத்திலெழும்
ஆனந்தந்தேனையுண்டன்புடனே தொழும்

தாயாயுலகத்தை யீன்றகுணங்குடி
தற்பரனைக்கொண்டு வெட்புடனேசென்று (சூத்திர) ௬

உ-ஆசிரியவிருத்தம்.

வங்கெனுமோர்மொழியாதிப் பீடேழுயாகத்தினது மகிமைபெற்றோர், வங்குசொரியுங்கொடுக்கும் பெண்களல்கும் புண்களுக்குண் மடியமாட்டார், வங்குசொரியுங்கொடுக்கும் பெண்களல்குற்கண்களுக்குண் மடியாவண்ணம், வங்கனுப தேசமெங்கள் குணங்குடிமாதவனெனக்கும் வைத்திடானோ. ௨

உ-தரு-இ-ம்-சாவேரி-சாப்புதாளம்.

பல்லவி.

வங்கெனுமுபதேசமெங்கள் குணங்குடி வள்ளலென்றோதுவனோ

அநுபல்லவி.

அங்கென்றெனட்சரங் கும்பித்தடங்கவும்
ஐம்பத்தோரட்சரந் தம்பித்தொடங்கவும் (வங்)

சரணங்கள்.

௧ உடல்பொருளாவியோ டெவையுங்கைக் கொள்ளவும்
உவந்தெனையுமுயரக் கொள்ளவும்
கொடிக்குமுன்மனவாசி மேலேறிக் கொள்ளவும்
நூலேணிமேலேறிக் கொள்ளவும்
படிமுடிச்சாணவா ராதாரம்வெள்ளவும்
படிக்குட்படிகடந்து கொள்ளவும்
கடினத்துடன்கண்டதையுங்கீழேதள்ளவும்
காதளவுக்குமேற் கொள்ளவும்
நடனமிடும்பரி துள்ளாட்டமெடுக்கவும்
நடித்துநடித்துகொண்டாண்டங் கொடுக்கவும்
இடைபிங்கலைகண்டத் தாட்டமொடுக்கவும்
எனக்குப்பயந்தெமனோட்டம் பிடிக்கவும்(வங்)

௨, கம்பமற்றவருட் கடனுள்வாய்மடுக்கவும்
களகளென்றேசும்மா குடிக்கவும்
செம்பொற்கமலா சனமீதிற்படுக்கவும்
செங்கீரையாடித் துடிக்கவும்
வம்பரைபோல்விளை யாட்டுப்படிக்கவும்
வாசியிலேறி நடிக்கவும்
ஒன்பதுவாயிலு ளிலையைப்பிடிக்கவும்
ஒளியிலேநடுகாலை மடிக்கவும்
தம்பிரானென்னு மெல்லேசூட்டவும்
தாக்குச்சுழிமுனை பில்லைப் பூட்டவும்

எம்பிரானெனுங் கல்லேயோட்டவும்
எனக்குப்பயந்தெமன்பல்லேக் காட்டவும்(வங்)

௩. தொட்டுபதேசித்த வுடன்சோதிதட்டவும்
தோடுமுன்னேசிவயோகங் கிட்டவும்
எட்டுகயிற்றிலெண்கால்ரண்டுக்கட்டவும்
எட்டியவன்காலேக் கட்டவும்
கட்டைப்பனைதனி லுங்களேக்கட்டவும்
கள்ளுக்கள்ளாச்சும்மா கொட்டவும்
கொட்டியகள்ளுண்டை பின்போலேமூட்டவும்
குதிகொண்டுகொக்கரி கொட்டவும்
நிஷ்டைபடைத்தனுபூதிமிஞ்சவும்
நிருவிகற்பசமாதி துஞ்சவும்
இஷ்டப்படிக்கரு ணின்றுகொஞ்சவும்
எனக்குப்பயந்தெமனின்று கொஞ்சவும்(வங்)

௪. கர்த்தன்றிருவடி பெற்றவனுகவும்
கட்டைக்கடைத்தேற லாகவும்
நற்றவமுற்ற சித்தனுமாகவும்
நாவுமங்நாலேந்து ளேகவும்
பத்துவகைநாதமுஞ்சுத்தமாகவும்
பத்தோடிருகலே சாகவும்
ஒற்றைக்காலான்மயிர் பாலத்திலேகவும்
ஒருபாய்ச்சலிற்றாண்டிப் போகவும்
வைத்ததீட்சையுந் திருத்தமாகவும்
வாலேயம்பிகைபொருத்த மாகவும்
எய்த்தவெருத்தமெருத்தமாகவும்
எனக்குப்பயந்தெமனொருத்தன் சாகவும்(வங்)

அ-தரு-இ-ம்-புன்னுகவராளி-ஆதிதாளம்

பல்லவி.

யானேயுனேநம்பினேன்-குணங்குடி-யானேயென்னுண்டவனே
யானேயுனேநம்பினேன்சாகச் செய்வையோ
யானுகநின்றென்னேநான்சாகச் செய்வையோ
பேயனுய்கண்டசிறுமானுகச் செய்வையோ
பெருமானுமெம்பெருமானுகச் செய்வையோ (யா)

சரணங்கள்.

௧. பாவையரைப்பாவிகூடச் செய்வையோ
பாவையர்க்குப்பயந்தோடிடச் செய்வையோ
பாவங்கள்வந்தெனேமூடிடச் செய்வையோ
பாவமெல்லாம்விட்டுச்சாடிடச் செய்வையோ

பாவிகள்போன்முகம்வாடிடச் செய்வையோ
பரஞ்சோதியம்பரமாடிடச் செய்வையோ
பாவாணர்போல்விண்ணிற்பாடிடச் செய்வையோ
பரிபூரணானந்தம்பாடிடச் செய்வையோ

௨. சண்டாளரைவாழ்த்திக்கொண்டாடச் செய்வையோ
சற்குருவைப்போற்றிக்கொண்டாடச் செய்வையோ
தொண்டாசையென்னையுந்துண்டாடச் செய்வையோ
தொண்டாசைதன்னையுமிண்டாடச் செய்வையோ
முண்டாரைப்போற்றிண்டுமுண்டாடச் செய்வையோ
முத்திதந்துதுதிகொண்டாடச் செய்வையோ
வண்டாய்த்துவண்டுதுவண்டாடச் செய்வையோ
வந்தருடந்தெனைப்பந்தாடச் செய்வையோ (யா)

௩. வெட்டவெளியிலென்னைவிட்டிடச் செய்வையோ
வித்தகன்பாதத்தைக்கட்டிடச் செய்வையோ
பட்டதெல்லாங்கேடுகெட்டிடச் செய்வையோ
பட்டதற்குப்பலன்கிட்டிடச் செய்வையோ
கெட்டைமரம்போலப்பட்டிடச் செய்வையோ
நீசனுக்குமருளெட்டிடச் செய்வையோ
மட்டியென்றென்கையைவிட்டிடச் செய்வையோ
வாசியும்பாவிக்குக்கிட்டிடச் செய்வையோ (யா)

௪. மதபேதமோதப்படுத்திடச் செய்வையோ
மதமற்றஞானம்படித்திடச் செய்வையோ
விதியற்றுப்பிச்சையெடுத்திடச் செய்வையோ
வேதாந்ததீட்சையெடுத்திடச் செய்வையோ
விதிவந்தென்னுயிரைப்பிடித்திடச் செய்வையோ
விதியென்றுகாலைப்பிடித்திடச் செய்வையோ
மதுவென்றுகள்ளைக்குடித்திடச் செய்வையோ
மதியமிர்தத்தைக்குடித்திடச் செய்வையோ (யா)

௩-ஆசிரியவிருத்தம்

எல்லாருமானிடரோ வெங்கள்குணங்குடியானை யிறைஞ்சினோர்கள், எல்லாருமானிடரா யெங்கள்குணங்குடியானை யிறைஞ்சவேண்டும், எல்லாருமானிடரோ யெங்கள்குணங்குடியானை யிறையேயென்றே, எல்லாருமிறைஞ்சுமெங்கள் குணங்குடியான்பொற்பதமேற் கெய்திடாதோ.

௬-தரு-இ-ம்-அசாவேரி-சாப்புதாளம்.

எங்கள்குணங்குடியண்டவன்பாதத்தை
என்றிந்தப்பாவிக்கு யாகண்டிடுமோ

அநுபல்லவி.

பொங்குந்திருவருளுந் தாங்கும்படிக்கருளும்
பூரணமயமாய்நின்ற காரணக்கடவுளான(எங்)

சரணங்கள்.

௧. கூட்டிக்கருணைவிழி காட்டிக்காட்டிக்கையைக்
கொடுத்துக்கொடுத்தணைத்துப் பிடித்துப்பிடித்துமெய்யைப்
பூட்டிப்பூட்டியருள் சூட்டிச்சூட்டித்தரும்
பூரணமயமாய்நின்ற காரணக்கடவுளான (எங்)

௨. முத்திவித்தாய்ப்பதிந்தும் மொய்த்தபயிராயெழுந்தும்
மூன்றுமண்டலத்தைமுட்டி மூடியொளியாய்விளைந்தும்
புத்தியுமேமுற்றுநூத்த பொற்பையுற்பதத்தருளும்
பூரணமயமாய்நின்ற காரணக்கடவுளான (எங்)

௩. வாதனைமாற்றியோக சாதனையேற்றியேற்றி
வாக்குமனமணுகா வாழ்வினைவாழ்த்தியேத்தப்
போதும்போதுமெனப் போதித்தருள்புரியும்
பூரணமயமாய்நின்ற காரணக்கடவுளான (எங்)

௪. சிற்பரத்துக்குட்சிறந்த தற்பரத்துக்குட்பிறந்த
சிற்பரத்துக்குட்பிறந்து சொற்படிகம்போற்சிறந்து
பொற்பிரபைகொப்பளிக்கும் அற்புதகர்ப்பூரமாகி
பூரணமயமாய்நின்ற காரண்க்கடவுளான (எங்)

௪-ஆசிரியவிருத்தம்.

அன்றெழுதினவனெவர்க்குமெங்கள் குணங்குடியானுமவன்கை யாலே, அன்றெழுது மெழுத்தழித் தெழுதிய வல்லபமெவர்க்குண் டார்க்குமில்லை, அன்றெழுதுமவனே நானழித்தெழுதவல்லன்காணு ந லாலே, அன்றெழுதுமெழுத்தழித்தென் மண்டையிற்று னல்லெழுத் தொன்றழுத்திடானோ.

௰-தரு-இ-ம்-பியாகடை-அடதாளசாப்பு

பல்லவி.

ஆண்டவனென்செய்வனோ குணங்குடி
ஆண்டவனென்செய்வனோ

அநுபல்லவி

ஆண்டவனணைத்தென்னை யருகில்வைத்திடுவனோ
தீண்டியும்பாராமற் றெருவிட்டிடுவனோ (ஆண்)

சரணங்கள்.

௧. தேனைப்பழித்தபே ரின்பங்கொடுப்பனோ
தேவடியார்கள்சிற் றின்பங்கொடுப்பனோ
மோனவருட்பரி வட்டங்கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும் பட்டங்கொடுப்பனோ (ஆ)

௨. உச்சிக்குள்வைத்த பொருளைக்கொடுப்பனோ
உச்சந்தலையில்ரண்டு குட்டுக்கொடுப்பனோ
மூச்சுடரோடுசோம வட்டங்கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும் பட்டங்கொடுப்பனோ (ஆ

௩. வற்றாவருட்செல்வங் கொள்ளைகொடுப்பனோ
மண்ணைத்தானள்ளிக் கைக்கொள்ளக்கொடுப்பனோ
முத்திதருமோன வட்டங்கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும் பட்டங்கொடுப்பனோ (ஆ)

௪. நாக்கன்னுள்வாயிற் காக்கக்கொடுப்பனோ
நாய்போலவாயில்தோறுஞ் சாக்கக்கொடுப்பனோ
மூக்குமுனையில்வன்னி வட்டங்கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும் பட்டங்கொடுப்பனோ (ஆ)

௫. சிட்டனாகவும்வாசி கட்டிக்கொடுப்பனோ
செட்டையிற்றுளிரண்டும் தட்டிக்கொடுப்பனோ
முட்டமுட்டச்சட்ட திட்டங்கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும் பட்டங்கொடுப்பனோ (ஆ)

௬. கண்டங்கடக்கத்தான் காட்டிக்கொடுப்பனோ
காலனுக்கென்னைத்தான் காட்டிக்கொடுப்பனோ
முண்டம்படாநிலை விட்டுக்கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும் பட்டங்கொடுப்பனோ (ஆ)

௭. செத்துப்போமுன்காய சித்திக்கொடுப்பனோ
செத்துப்போவென்று சாபத்தைக்கொடுப்பனோ
முத்தமிட்டிட்டுநல் லிஷ்டங்கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும் பட்டங்கொடுப்பனோ (ஆ)

௧௧-தரு-இ-ம்-செஞ்சுருட்டி-சாப்தாளம்.

பல்லவி.

ஐயையோயென்விதிவசம்-ஆருடன்சொல்வேன்

அநுபல்லவி.

நையுமுடல்மெய்யென் றெண்ணிப்பொய்யனுகினேன் (ஐயை)

சரணங்கள்

௧. பெண்டுபிள்ளையென்றுமனம் பித்துக்கொள்ளுதேநாம்
என்றுமிருப்போமென சண்டைத்துள்ளுதே (ஐ)

௨. பழிக்கோவென்னுடலைப் படைத்துவளர்ப்பேன்-இதை
புழுக்கோநாய்நரிக்கோ பிடுங்கக்கொடுப்பேன் (ஐ)

௩. கையில்வெண்ணைதனைவிட்டு நெய்யைத்தேடுறேன்-எங்கள்
ஐன்பாதந்தனைவிட்டுப் பொய்யைக்கூடுறேன் (ஐ)

௪. மாதுமக்களென்றுமென் மதிமயங்குதே-இது
சூதுசெய்வாரோடுகூடி வாதுபேசுதே (ஐ)

௫. வாக்குமனமணுகாது வான்பொருளுள்ளே-அதை
நோக்கிநோக்கிப்பார்க்கு வாய்க்குமேகொள்ளை (ஐ)

௬. புந்திமகிழுண்டுடுக்கச் சிந்தைதுள்ளுதே-ஐயோ
அந்தகாரந்தனையக மாக்கிக்கொள்ளுதே (ஐ)

௭. காயிலையுதிர்ந்தசருகு கனிதின்றுநாம்
ஆயுமறைமுடிவைத்தேடிப் போவதுமென்று (ஐ)

௮. தேகத்தினம்புவெளி யாகவோடினூர்-அவர்
ஆகமச்சொற்படிக்கே யருளைக்கூடினூர் (ஐ)

௯. ஆழிகரையின்றிநிலை நிற்கவில்லையோ-யான்
பாழில்லையாதெனக்கோர் பாதையில்லையோ (ஐ)

௰. ஆசைபாசவமற்றவ ரருளைப்படைப்பார்-அவர்
தேசிகன்குணங்குடி தெரிவிலிருப்பார் (ஐ)

௫-ஆசிரியவிருத்தம்.

என்றலையிலிட்டபொல்லா விதியானதற்குணங்குடிவாழ் விளங்குதில்லை, என்றலையிலிட்டபொல்லா விதிக்கெண்ணெயிட்டாலும்வேகுதில்லை, என்றலையிலிட்டவிதிக் கினியெவர்பட்டுத் தொலைப்பாரெனநின்றேங்கி, என்றலையிலிட்டவிதி தனைநினைந்துபாவியா னிடைகின்றேனே.

௰௨-தரு-இ-ம்-ஆகிரி-அடதாளசாப்பு

பல்லவி.

ஏதேதுசெய்திடுமோ பாவிவிதி ஏதேதுசெய்திடுமோ

அநுபல்லவி

ஏதேதுசெய்து மௌனமோசஞ்செய்யுமோ
மாதவஞ்செய்து மனுவாகச்செய்யுமோ (யே)

சரணங்கள்

௧. சற்றுநல்லறிவற்ற மாடாகச்செய்யுமோ
சாகாவரம்பெற்றுக் காடேகச்செய்யுமோ
கற்றறிமூடர்கட் கீடாகச்செய்யுமோ
கர்த்தன்குணங்குடி வீடாகச்செய்யுமோ (யே)

௨. கத்திகத்திப்பாவி செத்திடச்செய்யுமோ
கர்த்தன்திருவருள் பெற்றிடச்செய்யுமோ
கொத்தும்பெண்ணரவெனைக் கொத்திடச்செய்யுமோ
குணங்குடிவாழ்க்கைவந் தெய்திடச்செய்யுமோ (யே)

௩. செத்தபிணத்தோடு சேர்ந்திடச்செய்யுமோ
சித்தர்கணத்தோடு சார்ந்திடச்செய்யுமோ

மெத்தப்பணந்தேடி வாழ்ந்திடச்செய்யுமோ
மேலக்குணங்குடி வாழ்ந்திடச்செய்யுமோ(யே)

௬. பாழானகாயத்தைப் பாழாகச்செய்யுமோ
பாழாகப்போமுணமுப் பாழாகச்செய்யுமோ
தேளானபெண்களுக காளாகச்செய்யுமோ
தேறிக்குணங்குடிக் காளாகச்செய்யுமோ (யே)

௭ தேவடியாள்விட்டு நாயாகச்செய்யுமோ
தேவடியாளுமென் ருயாகச்செய்யுமோ
நாவுருசிகொண்டு பேயாகச்செய்யுமோ
நாதன்குணங்குடிக் கேயாகச்செய்யுமோ(யே)

கஈ-தருஇ-ம்-பரசு சாப்புதாளம்

பல்லவி.

அல்லாகூவென்னுங்கள் சதாகாலம்-அல்லா கூவென்னுங்கள்

அநுபல்லவி.

அல்லாகூவென்னுங்கள் அஞ்ஞானந்தனைவிட்டு
எல்லோரும்வெளிப்பட்டு இப்போதெதிர்ப்பட்டு(அல்)

சரணங்கள்.

௧. வருத்தசோதிமெய்ஞ்ஞான வாரிலையமனமுன்ன
வஞ்சமில்பரமார்த்த குருவருளியதென்ன
ஜெகஜாலவலேதன்னுட் சிக்கப்பலவுமின்ன
சிவருபந்தெரியாமற் செத்திரந்துபோமுன்னம்(அல்)

௨. அல்லாகுவென்ற வரும்பொருளாமென்ன
அனந்தமறைகளு மப்படியேபன்ன
நல்லறிவாளரு நாளுமெடுத்துச்சொன்ன
நன்மையெல்லாமனக் குண்மையிலேமன்ன(அல்)

௩. ஆசாபாசமென்னும் அழிபுத்திகளுமற்று
அளவிட்டறியவொண்ணு தருண்ஞானந்தனைப்பெற்று
மாசற்றருளிருமுன் மனதுறுவினையற்று
மாதாபிதாவெனு மயமுழுதுமற்ற(அல்)

௪. மும்மலக்காட்டினை முழுவதையுமறிந்து
மூலநெருப்பினை மூட்டமூட்டவிரிந்து
சின்மயஜகஜோதித் தெளிரவேதெரிந்து
தேசிகன்குணங்குடி தெரிவீதியிலிருந்து(அல்)

கஈ-ஆசிரியவிருத்தம்.

புனிதகுணங்குடிவாழ்க்கைப்போகாமற் பொங்குமிச்சை பொங்கிப்பொங்கி, புனிதகுணங்குடிபடைத்துப் போதபரிபூரணபோதகமும்பூண்டு, புனிதகுணங் குடியானைப் போற்றுதுபோற்றுவார் போலுமிந்தப், புனிதகுணங்குடியானைப் போற்றியிந்தப்புல்லனும்வாய்புலம்புவானே.

கச-தரு-இ-ம்-ஆனந்தபைரவி-அடதாளசாப்பு.

பல்லவி.

கத்திக்கத்தித்தொண்டையுங்கட்டிடச் செத்தேனே
காணுமெங்கள்குணங்குடி சித்தேனே

அநுபல்லவி.

முத்தனேமுத்தனே முத்தனேயென்றும்
கர்த்தனேகர்த்தனே யென்றுமுனைத்தேடி

சரணங்கள்.

௧. நாயனே நாயனே நாயனேயென்றும்
மாயனே மாயனே மாயனேயென்றும்
தூயனே தூயனே தூயனேயென்றும்
நேயனேநேயனே யென்றுமுனைத்தேடி (கத்தி)

௨. ஏகனேயேகனே ஏகனேயென்றும்
யோகனேயோகனே யோகனேயென்றும்
மோகனேமோகனே மோகனேயென்றும்
வாகனேவாகனே யென்றுமுனைத்தேடி (கத்தி)

௩. நாதனேநாதனே நாதனேயென்றும்
நீதனேநீதனே நீதனேயென்றும்
போதனேபோதனே போதனேயென்றும்
தூதனேதூதனே யென்றுமுனைத்தேடி (கத்தி)

௪. நித்தனேநித்தனே நித்தனேயென்றும்
சுத்தனேசுத்தனே சுத்தனேயென்றும்
பத்தனேபத்தனே பத்தனேயென்றும்
அத்தனேஅத்தனே யென்றுமுனைத்தேடி (கத்தி)

௫. ராஜனேராஜனே ராஜனேயென்றும்
போஜனேபோஜனே போஜனேயென்றும்
தேசனேதேசனே தேசனேயென்றும்
வாசனேவாசனே யென்றுமுனைத்தேடி (கத்தி)

எ-ஆசிரியவிருத்தம்.

கண்டதெல்லாங்கனவாகக் கண்டகுணங்குடியார்நற் கருணைகாட்டில்
கண்டதெல்லாங்கனவாகக்கண்டருட்கொண்டவராகக்கருணைகாட்டுங்
கண்டதெல்லாங்கனவாகக்கண்டருட்கொண்டவர்போலக்கன்மியாலே
கண்டதெல்லாங்கனவாகக் கண்டிடவோர்கனவேனுங்கண்டிலேனே.

கரு-தரு-இ-ம்-காம்போதி ரூபகதாளம்

பல்லவி.

கனவுகண்டிலனே பாவியொரு-நினைவுகண்டிலனே

அநுபல்லவி.

கனவுங்கண்டிலன் காட்சிகொடுக்கவுங்
கர்த்தனருளடை காத்துக்கிடைக்கவுங்

| | |
|---|---|
| மனமுந்தேறிப்போய் | வாழ்வைவிடுக்கவும் |
| மாகுணங்குடிமெய் | வாழ்வைப்படுக்கவும்-கண |

சரணங்கள்.

| | |
|---|---|
| க. மானுபிமான | மடமையைப்போக்கவும் |
| மாதர்க்கடிமைப் | படாதெனைக்காக்கவும் |
| வானுதிபூத | வயம்வந்துவாய்க்கவும் |
| வாசாமகோசர | வாழ்க்கையுஞ்சாய்க்கவும் |
| மோனமௌன | மணிமாலைகோக்கவும் |
| மூக்குமுனையைச் | சுழிமுனையாக்கவும் |
| ஞானத்திருநடன | நாதமுங்கேட்கவும் |
| நாதன்குணங்குடி | பாதையும்பார்க்கவும்-கண |
| | |
| உ. நாதாந்தமோன | குருபதம்போற்றவும் |
| நாவைமடக்கியந் | காளத்துளேற்றவும் |
| வேதாந்தவீட்டின் | வெளிவாயிற்சாற்றவும் |
| வித்தகன்வந்து | விளக்கெடுத்தேற்றவும் |
| சீதமதிதன் | னமிர்தத்தையூற்றவும் |
| பூதலயந்துட் | பொறிகளைத்தாழ்த்தவும் |
| புண்ணியன்குணங்குடி | யோங்கிடவாழ்த்தவும்-கண |
| | |
| ௩. பாங்காயுதவுமெங் | கோன்வந்தடுக்கவும் |
| பஞ்சகோசமெனுங் | கோட்டைபிடிக்கவும் |
| ஓங்காரவீட்டினுங் | குள்ளேயடுக்கவும் |
| ஒன்றுக்கொன்று | யொடுக்கிப்படுக்கவும் |
| தேங்காமரத்தினிற் | கள்ளுவடிக்கவும் |
| தேறத்தெளிந்துட் | டெளித்துக்கொடுக்கவும் |
| மாங்காயுள்வண்டாய் | மயங்கிக்கிடக்கவும் |
| வாசிகுணங்குடி | வாயிலடக்கவும்-கண |
| | |
| ச. கள்ளக்கருத்துக் | கட்டோடேவேகவும் |
| கன்மந்தொலைந்து | கடைத்தேறிப்போகவும் |
| கொள்ளித்தேளான | மனமாயைசாகவும் |
| கூர்விழியாரிஷ்டங் | கொட்டுண்டுபோகவும் |
| உள்ளத்திருக்குமற் | றுத்தமனாகவும் |
| உப்புறவுந்தப்பி | யூரைவிட்டேகவும் |
| வெள்ளத்திருக்கருணை | யூடுடுநோகவும் |
| மெய்யன்குணங்குடி | பையனுமாகவும்-கண |
| | |
| ரு. வேசையராசையை | வேரோடறுக்கவும் |
| வெற்றிக்கொடிகட்டி | மீசைமுறுக்கவும் |

கஎ-தரு-இ-ம்-சன்னியாசி-சாப்புதாளம்.

பல்லவி.

எங்கள்குணங்குடியானை என்றைக்கோகாண்பேன்

அநுபல்லவி.

தங்குபேரின்பந்தரு வென்றகுபிரானை-எங்கள்

சரணங்கள்.

க. அங்கிங்கென்றதெங்கும் பிரகாசமாய்நின்ற
செங்கமலபீடமிசை செங்கீரையாடும்-எங்க

உ. சாசுவதானந்த சகசநிஷ்டையில்
ஓசைமணித்தீபமதி லொன்றிக்கொண்டோன்-எங்க

௩. பொற்பிரபைக்கொப்பான கற்பூரத்தீபம்போல்
விற்புருவனையமொளி விளக்காய்நின்ற-எங்க

௪. உனக்குள்நானாகவும்என் றனக்குநீயாகவும்
எனக்குள்நானுனக்குள்நீ என்றதாய்நின்ற-எங்க

ரு. அவனென்றியலுமொன்று மசையாவெனுமொழிக்
கிவனென்றுசொல்லவும்வல் லவனாகியேநின்ற-எங்க

சா. அண்டபிண்டமதற்கு மப்புறத்துக்கப்புறம்
கொண்டபெரும்பெருமையுங் கொண்டபொருளானே-எங்க

எ. ஆர்க்குமரிதாகியபே ராசைமிகவுங்கொண்டு
பார்க்கவனைத்துயிரமும் படைத்துக்கொண்டோன்-எங்க

அ. நோக்கிறதுநோக்கொணாது நோக்குமேனர்க்குநேர்க்காய்நின்ற
வாக்குமனமற்றபெரு மானவனாய்நின்ற-எங்க

௯. பொன்னிலமாதராசையும் பூரிதனக்கேயளித்து
மன்னுமுனிவர்க்குதவு மன்னவன்குருவானை-எங்க

௰. வஞ்சனைமனவஞ்சி யருமஞ்சியொஞ்சவும்
அஞ்சுபுலமேவிடுமின் றனைக்கொஞ்சியஞ்சவும்-எங்க

கக. பெண்கொண்டபேர்பேரவெனையு மன்கொண்டபேர்முன்
கண்கொண்டமணியாய்நின்று காட்சியேதரவும்-எங்க

உ-கொச்சகம்.

என்னையறிந்தே யிருந்தேன்வெகுகாலம்
என்னைமறந்திப்போ திறந்தாலிதுவலமோ
என்னையறிவாலறிய வெளியில்மகிழ்ந்தே
என்னையறிவித்தாளா யென்தாய்குருபரனே.

கஅ-தரு-இ-ம்-ஆனந்தபைரவி-ஏகதாளம்

பல்லவி,

என்னையறிந்தேனே-இனி ஏகாந்தமானேனே

அநுபல்லவி.

தன்னைமறந்து தலைகீழாய்நில்லாமல்
என்னைமறந்து முன்னைநினைந்திடாபேர்-என்

கண்டனம்.

௨௰-தரு-இ.ம்-அடாணா-சாப்புதாளம்

பல்லவி.

மீசையுள்ளாணபிள்ளைசிங்கங்களென்கூட
வெளியினில்வாருங்கள்காணும்

அநுபல்லவி.

நாசிநிரம்பவு மயிர்தானிரண்டுகால்
நடுவினுமொருகூடை மயிர்தான்
ரோசங்கெடுவார்களென் கடைமயிர்தான்-குணங்
குடிகொண்டாலென்னுயிர்க் குயிர்தான்-மீசை

சரணங்கள்.

௧. படிக்கும்படிநடக்கப்படிக்காலோபிகஅ மோட்சம்
பதம்மற்றுப்போனாலும் போகட்டும்-அவர்
முடிக்குமுடிதரித்து முடியமுடியவாழ்ந்து
முடிந்துமுடிந்துபோனாலும் போகட்டும்-இன்னுங்
குடிக்கக்கஞ்சியுமற்றுக் குண்டிக்குத்துணியற்றுக்
குருடராய்ப்போனாலும் போகட்டும்-என்னை
அடித்தாலுமெலும்பெல்லா மொடித்தாலுமவர்க்கஞ்சேன்
அடித்தாலடித்துக்கொண்டு போகட்டும்அந்தக்
கெடுவார்களென்கடை மயிர்தான்
குடிகொண்டாலென்னுயிர்க் குயிர்தான்-மீசை

௨. மடையரெல்லாங்கூடிக் கூத்தாடிக்கூத்தாடி
வையாளிபோட்டாலும் போட்டு-இன்னும்
விடியவிடியவும் பரத்தையர்மடிகளில்
விடியவிடிவயம் பரத்தையர்மடிகளில்
விளையாடினாலும்விளை யாடட்டும்-கள்ளுக்
குடியரெல்தாங்கள்ளைக் குடித்துக்குடித்தவர்கள்
குடிகெட்டுப்போனாலும் போகட்டும்-ஞானம்
படியாரெல்லாமென்னைப் பழித்துப்பழித்துக்கொண்டு
பகைத்தாற்பகைத்துக்கொண்டு சாகட்டும்-அந்த
கெடுவார்களென்கடை மயிர்தான்குணங்
குடிகொண்டாலென்னுயிர்க் குயிர்தான்-மீசை

௩. நெடுநேரம்போலோங்கி வளர்த்துமறிவற்றவர்
நெருப்புண்ணப்போனாலும் போகட்டும்-அவர்
இடிமட்டிக்சுவரைப்போ லிருந்தென்னவிறந்தென்ன
எப்படிபோனாலும் போகட்டும்-இன்னும்
கொடும்புமிடும்பும்வம்புங் குடிகெடுங்குடிகொண்டு
கூத்தாடினனிங் கூத்தாடட்டும்-என்னை
மடியிற்கைபோட்டிழுத்து லடிபோட்டு

மல்லாடிநானுமல் லாட்டும்-அந்தக்
கெடுவார்களென் கடை மயிர்தான்-குணங்
குடிகொண்டாலென்னுயிர்க் குயிர்தான்-மீசை

௬. கடிநாய்குடிகளான படுசூட்டுகணமாயைக்
கதவிடுக்கினிற்பட்டே சாகட்டும் புலிக்
கடுவாய்க்குங்கொடிதான படுபோக்கிரிகள்சும்மா
கடுநரகில்விழுந்தே வேகட்டும்-சுற்ற
கெடுபூண்டாகமுளைத்த கொடுமாடுபிடிங்கிகள்
கெடுபூண்டுகளாய்த்தானே போகட்டும்-இன்னம்
நெடுமரம்போற்கொத்த மடவோப்பாகுடிக்கிகள்
நெடுமயம்போற்றானே யாகட்டும்-அந்தக்
கெடுவார்களென் கடை மயிர்தான்-குணங்
குடிகொண்டாலென்னுயிர்க் குயிர்தான்-மீசை

௧௨-ஆசிரியவிருத்தம்.

சாகாமற்செத்திருக்குஞ் சற்குருவின் குணங்குடியைச்சார்ந்தோமாடற், சாகாமற்செத்திருக்குஞ்சாயுச்யபதந்தருஞ்சாட்சாதியாக்குஞ் சாகாமற்செத்திருக்குந்தன்மயத்தோக்குநற பெருந்துறையுங் காட்டும் சாகாமற்செத்திருக்கும்முத்தியுஞ்சித்தித்திடுங்காண்டனக்குத்தானே.

௨௧.தரு-இ-ம்-பரிசு-ஆதிதாளம்

பல்லவி'

போவோங்குணங்குடிக்கெல்லோரும்-புறப்படுங்கள்
போவோங்குணங்குடிக்கெல்லோரும்

அநுபல்லவி.

பாவங்கள்சேர்ந்திடுங் காய்ந்திடும்நீங்திடும்
மாய்ந்திடுமோய்ந்திடுந் தீய்ந்திடுமிட்சணம் போவோ

சரணங்கள்.

அண்டம்புவனங்கொண்ட நிஷ்டை-சாதிக்கவறியா
முண்டமுழுதும்பட்ட கட்டை-மணித்தேரோடு
தண்டிகையானைகுதிரை பொட்டை-வைத்தேறிவாழுஞ்
சண்டியுடலொட லொட்டை-மின்னார்களின்பங்
கொண்டுமயங்கிக்காம வெட்டை-நஞ்சுண்டுசாமி
ரண்டுங்கெட்டவனேபேய் மட்டை அவனுக்கந்தத்
தொண்டாசைகால்ரண்டுந் தான்குட்டை-விழிக்குருடர்
நண்டளந்தநாழியவர் நமக்கேன்காணாந்தத்தெஷ்டை-போ

௨: கோத்திலாசையான்போய்க் கூடு ஒருவருக்குஞ்
சாற்றுக்காகாநாற்றகரு வாடு சொறிமல

மூஞ்சிரமுமூற்றிவைத்த வோடு-இடுமடைய
வேற்றுதற்கேற்றசண்டி மாடு-உயிர்விடுக்கும்
கூற்றுவன்கையாயுதத்திற் கிடு-எங்தெந்தத்திக்கிற்
பார்த்தாலும்பிறலுள்ள விடு-சமைத்தெடுத்த
சோற்றூற்குவித்துவைத்த மேடு இவையறியார்
ஏற்றபடிகேற்றலேவரே னமக்குமந்தக்கேடு-போ

௬. செட்டிசெய்யவேண்டிய தில்லை-பரதேசிகள்
சட்டியெடுப்பதுவுந் தொல்லை பிச்சைக்கஞ்சிக்குத்
திட்டமுடன்மேவனுமோ கல்லை-உறங்குதற்குக்
குட்டிச்சுவர்களிலுண் டெல்லை ஈடும்நமக்கும்
பட்டணத்திலெவரு மில்லை-அறிவுகெட்ட
மட்டியறிபாவிந்தக் கல்லே-மனக்குரங்கைக்
கட்டிவைத்தாலுங்காட்டும் பல்லை-அதைப்படித்த
துட்டமாமாயைப்பிசாசைத் துரத்திதுரத்திக்கொல்ல-போ

௭. சோமனுமயம்பாடு சாயும்-எழுஞ் சூரியன்
நாம் இல்லாமலறத் தேயும்-பாருவளியில்
நேமமுடன்சுழினை யாயும்-மதிபமிர்த்
வாமமடைதிறந்து பாயும்-தத்தாதியோடு
காமக்குரோதங்களைத் தீயும்-தியாதுயோக
பூமிவிளையுமரு ணையம்-விளைந்தபோகம்
நாமோமைகக்கொள்ளநம்ப த்தாயும்-இடைப்பதற்கு
சாமுன்செத்தசற்குருநாதம்சார்ந்திருப்பதுவேயுபாயம்-போ

௮. நொங்கும்நுரையுமாகப் பொங்கும்-காமக்கடலுள்
முங்கும்பாவியுடலைச் சொங்குஞ்-சொறிசிரங்கும்
வங்கும்மமமென்று தின்கும்-நரம்புந்தோலும்
தொங்குமினுமினுப்பு மங்கும்இல்லந்துரந்த
சிங்கங்கட்கில்லைகாணும் பங்கம்-மேனியுயர்ந்த
தங்கமயமாய்நின்று வங்கும்-அவர்கட்கன்றோ
தங்குஞ்சாயுஜ்யபதந் தங்கும்-நமக்குமதிக
பங்குந்தக்குகவிப் பராபரமருளிரங்கும்-போ

௧௩-ஆசிரியவிருத்தம்.

ஐயன் குணங்குடியானை யன்றிவேறுண்டென்று ளாய்ந்துபார்த்தேன், ஐயன் குணங்குடியானை யன்றிவேறொன்றுமென்னு ளாயக்காணேன், ஐயன்குணங்குடியானையாலேயென்றறிந்தபின்பென்னறியாய்நின்ற ஐயன் குணங்குடியானை யதிமோகத் திருடனாய்வரனே.

## உஉ-தரு-இ-ம்-தோடி-சாப்புதாளம்

பல்லவி.

அதிமோகத்திருநடனம் புரிந்தானெங்கள்
ஐயன்குணங்குடியான்

அநுபல்லவி

அதிமோகத்திரு நடனம்புரிந்தானையன்
ஆர்க்குந்தெரியாவென்றன் மூக்குமுனைக்குமேலின்று (அதி)

சரணங்கள்.

க. கஞ்சமின்னிகளைப்போலுங் காலிற்சதங்கைதொட்டுக்
காணமயில்போல்நின்று களித்துநடனமிட்டு
வஞ்சியர்க்காளாக்க வருமூவாசையைவிட்டு
வஞ்சனமனைக்காலா லுதைத்தொருத்தாள்மட்டி
மடித்துக்கொண்டேனைக்கையிற் பிடித்துக்கொண்டருண்முறை
படித்துக்கொண்டொத்தன்பு துடித்துக்கொண்ட (அதி)

உ. முகந்துக்கெதிரின்னுமுச் சுடரும்பம்பரமாட
மோகமணிமாலைபொன் முலைமேற்பின்னுலுமாட
வருத்தபாருஞ்சோதிநின் றருகிற்பாய்ந்துபந்தாட
வாலையம்பிகைகாலை மடித்துநடனமாட
வடித்துக்கொண்டபித்தனை குடித்துக்கொண்டானந்தம்
படுத்துக்கொண்டடிக்கடி நடித்துக்கொண்ட (அதி)

௩. பஞ்சாரிக்கும்பலை மனைநடாளங்கள்போட
பரிபூரணானந்தம் படித்துமத்தளம்போடக்
கொஞ்சுமணவாசியுங் கொஞ்சிவையாளிகள்போட
கோலாகலங்கள்பாடிக் கூத்துமேற்கூத்துகள்போடக்
குதித்துக்கொண்டமன்றனை மதித்துக்கொண்டருடன்னை
பதிந்துக்கொண்டேனைவாழ்த்தித் துதித்துக்கொண்ட (அதி)

ச. கலசநிறையமிர்த சுதிருமிழ்மதிப்பலை
களகளெனவேபூட்டிக் கலைதீர்க்கமணிவாலை
மலைபோலெழுந்துவந்து மகிழ்ந்தப்பயன்மேலே
மாருக்கருணைவைத்து வைத்துத்தலைமேற்காலை
மடித்துக்கொண்டவன்பல்லைக் கடித்துக்கொண்டேமன்கையை
ஒடித்துக்கொண்டுமெய்த்தவம் முடித்துக்கொண்ட (அதி)

கீர்த்தனைகள் -முற்றிற்று.

——(*)——

# ஆனந்தக்களிப்பு.

---

ஆசிரியவிருத்தம்.

எங்கள்குணங்குடியானே யெண்ணரும்பொருளாய்நின்றிலங்கையாலே, எங்கள்குணங்குடியானே யெண்ணரும்பொருளேயென் றிறைஞ்சவேண்டும், எங்கள்குணங்குடியானே யெண்ணரும்பொருளே யென்றிறைஞ்சிநின்றால், யெங்கள்குணங்குடியானே யெண்ணரும்பொருளாய்நின்றிரங்குவானே.

ஆனந்தக்களிப்பு.

எங்கள்குணங்குடி யானே-நமக்
கின்னருள்புரிவானடி மானே-எங்கள்

அத்துவிதப்பொருள்காப்பாம்-எனக்- கானந்தபரமானபராபரங் காப்பாம், கர்த்தவியத்தருள்காப்பாம்-காட்- டத்தன்காரணங்காப்பருளித்தான் எங்கள் ௧

முத்தரெல்லாரையும் போற்றாய்-தவ-மோனநிலைக்குரு நாதனைப் போற்றாய், சித்தரெல்லாரையும்போற்றாய்-என்று-சிறக்குந்தன்போற்றுதலே யருளித்தான்-எங்கள். ௨

கட்டுபடாவச்சுமட்டங் காலைக்-கட்டவரியாரைக் காலினால்வெட்டும், வெட்டியகால்களைவெட்டும் என்று வேகத்துடனே விதித்தருளித்தான்-எங்கள். ௩

மூலப்பிராணனைநோக்கும் நோக்கின் முத்திவீடுமுமக் கேவந்துசாய்க்கும் - வாலப்பிராயமுமவாய்க்கும் என்று வாசியினேற்ற மகிழ்ந்தருளித்தான்-எங்கள். ௪

பன்னிருகால்வெளிமானே வெளி பாயாமலுள்ளே மடக்கியத்தானே,சென்னியிலூருஞ் செந்தேனே என்று சிந்தைவைத்துக்கட்டிதந்தருளித்தான்-எங்கள். ௫

தேகாபிமானத்தை வெல்லும் போய் திட்சைபெற்றோர்கள் மனதிற் செல்லும்,மோகாதிபோகத்தைவெல்லும் என்று முற்றுநச்செய்த்தெழுதும் மருளித்தான் எங்கள். ௬

ஆழங்கலையைக்குறைக்கும் ஆறு அங்கணகோபுரவாயிற்றிறக்கும், பாயுமதிப்பால்சுரக்கும்-என்று படித்தும்படியேறும் படிக்கருளித்தான் எங்கள். ௭

மூலக்கனலிலேமூட்டும் ஒளி மூக்குமுனையுந் திருநடங்காட்டும், பாலைக்கறந்துண்ணக்கூட்டும் என்று பட்சமவைத்தென்னைப்புடைத்தருளித்தான் எங்கள். ௮

கண்டங்கடந்திணைவைத்தேற்றும்-இன்னும்-காரணமான கடவுளைப்போற்றும்,மண்டியமிர்தத்தைத்தேற்றும்-என்று-மாசுலுபதேசம் வைத்தருளித்தான்-எங்கள். ௯

கற்பமுறைதனைகையிற்காட்டும்-வருங்-காலரைக்காலா லுதைத்துவிட்டோட்டும் அற்பவுடற்கமுதூட்டும்-என்று-ஆசைபூட்டிப்பூட்டி யாண்டருளித்தான்-எங்கள். ௰

ஓங்காரத்தீட்சையுஞ்சொல்லும்-நாளும் உன்றனைக்கொல்லு மகந்தனைக்கொல்லும், ஆங்காரந்தன்னையும்வெல்லும்-என்று-ஆதரித்தாதரித்தாண்டருளித்தான்-எங்கள். ௧௧

நீங்காதயோகமும்வாய்க்கும்-தீப-நெற்றிக்கண்மத்தியில் வைத்தொளியாக்கும்,தூங்காததூக்கமுந்தூங்கும்-என்று-தூண்டித்தூண்டிமுச்சுடரளித்தான்-எங்கள் ௧௨

பாங்காகஞானம்படைக்கும்-ஐந்து-பாழ்ம்புலவேடரைப்பல்லையுடைக்கும், தாங்காதமையல்கிடைக்கும்-என்று-சாதுர்யமாய்த்துடித்துளிருத்தான்-எங்கள். ௧௩

மேலூறுவெட்டியைக்கூட்டும்-கூடி-மேலைமுச்சந்தியில் வையாளியோடும்-காலழிகொள்ளவும்நாடும்-என்று-காட்டாமற்காட்டிக் கணித்தருளித்தான்-எங்கள். ௧௪

வஞ்சியராசையைவிள்ளும்-விரு-மாயமயக்கத்தைதவிரென்று தள்ளும்-குஞ்சிருதிரைமேற்கொள்ளும்-என்று-கோபத்தைக்காட்டிக் குணமருளித்தான்-எங்கள். ௧௫

பாலைப்புசித்திடவேண்டும்-என்-பராபரமுமுன்பார்வைக்குத்தோன்றும், காலைப்பிடித்திடமீண்டும்-என்று-கள்ளத்தனமாய்க் கதியருளித்தான்-எங்கள். ௧௬

தூலத்தையுங்கெட்டியாக்கும்பின்பு-சூட்சத்தைக்காண மிகவெளிதாக்கும்-ஞாலத்தையும்விட்டு நீக்கும்-என்று-ஞாயமொப்பித்துநவின்றருளித்தான்-எங்கள். ௧௭

முண்டங்கென்றுமுபதேசம்-ஓதும்-மின்காலினுதங் கலிரென்று பேசும்-கண்டங்கடக்கவுங்கூசும்-என்று-கண்டக்கடச்சுங்கணக்கருளித்தான் எங்கள். ௧௮

நங்குதல்தப்பித்தலாகும்-நின்று-தங்காதுகும்பித்தல்ரேசித்தலாகும் பொங்குதல்பூரித்தலாகும்-என்று-பூசைமுறையும் புகன்றருளித்தான்-எங்கள். ௧௯

முப்பாழ்முடிந்ததும்புத்தி-அந்த-மூன்றுக்குமுத்திரடந்துசிந்திந்த அப்பாழ்விடிந்தமுவெற்றிஎன்றேயாருமறியவறிவருளித்தான்-எங்க

பொற்பிரபைபோலொளிபூணும் அதிற் பொல்லாதகாயமிருந்திடுங்காணுந்-செப்புதற்குமனை நாணும் என்று -செப்பித்திருத்திச் சிரித்தருளித்தான்-எங்கள் கஉ

சோம்பலுந்தூக்கமுநீக்கும்-போதும்சுகமதுகொள்ளவும்போகமலாக்கும் பாம்பாணைபெண்ணுசைப்போக்கும்என்று-பாவிமுகத்தையும் பார்த்தருளித்தான்-எங்கள். உஉ

ஓங்காரவீடுகிடைக்கும் அதன் ஒன்பதுவாயிலு மொக்க வடைக்குந்தேங்காயுங் கல்லையுடைக்கும்-என்றும் தேங்காய் தனைத்தின்னும் பாங்கருளித்தான்-எங்கள் உந

கர்த்தளருளுங் கைகூடும்-முகக் கண்முன்பரவெளி பம்பரமாடும்வித்தகனைத்தினந்தேடும்-என்று-வேதத்தினல்விபரித்தருளித்தான் எங்கள். கூச

பூட்டை யுடைத்திட வேணும் மனப் பூட்டை யுடைக்க வைராக்கியம் வேணும்-ஓட்டையுடைத்துக்கொள்காணும் என்றே-ஒருவர்க்குமாகாவுரையருளித்தான்-எங்கள். உரு

முடியமாயைவிடியு முன்னே-மோசப்படுத்துமூவாசையும்படியும் ஓடியமிர்தம்வடியும்-என்றே ஓதாமலோதியுரைத்தருளித்தான் - எங்கள். உசா

எட்டெட்டையோ ரெட்டுகட்டும் எண்ணுண்கையு மந்தமீவரெட்டுகட்டும் -முட்டும்ரெட்டையுங் கட்டும் என்று முணுஞன்கை கட்டி முடித்தருளித்தான் எங்கள் உஎ

பொங்குந்திருவருள்வாழி பரி பூரணமானபரம்பொருள்வாழி தங்குரு வருளவாழி என்று தன்னருள் வாழியைத் தானருளித்தான் எங்கள். உஅ

ஆனந்தக்களிப்பு-முற்றிற்று



வாழி விருத்தம்

வாழிமேல்வாழிவாழிமருள்வாரிவாழிவாழி
வாழிமேல்வாழிவாழிவாழிமருணேயம்வாழிவாழி
வாழிமேல்வாழிவாழுஞ்சிவஞானம்வாழிவாழி
வாழிமேல்வாழிவாழிவாழுங்குணங்குடிவாழிவாழி.

ஆக-திருப்பாடல்-௬ாக.

---

மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்
முற்றிப்பெற்றது



பிசுமில்லாகி

# பதிகவகராதி.




| பதிகம். | பக்கம் |
|---|---|
| குருவணக்கம் | ௩0 |
| முகியித்தீன்சதகம் | ௩௪ |
| கொச்சகம் | ௫௯ |
| நேரிசையாசிரியப்பா | ௬0 |
| அகத்திசர்சதகம் குருவணக்கம் | ௬௧ |
| குருவருணிலை | ௬௨ |
| தவனிலை | ௬௫ |
| துறவினிலை | ௬௯ |
| மயங்கினிலை | ௭௩ |
| ஞானநிலை | ௭௬ |
| தொகைநிலை | ௭௯ |
| பொறைநிலை | ௮௩ |
| காட்சிநிலை | ௮௬ |
| தியானநிலை | ௮௯ |
| சமாதிநிலை | ௯௨ |
| அறுபத்துநாலடி ஆசிரியவிருத்தம் | ௯௬ |
| கட்டளைக்கலித்துறை | ௯௯ |
| நேரிசைவெண்பா | ௱௧ |
| நாகூர்மீராசாகிபு ஆசிரியவிருத்தம் ஆனந்தக்களிப்பு | ௱௨ |
| பிராமயக்கண்ணி | ௱௭ |
| பராபரக்கண்ணி | ௱௨௩ |
| றகுமான்கண்ணி | ௱௨௮ |
| எக்காலக்கண்ணி | ௱௩௪ |
| கண்மணிமாலைக்கண்ணி | ௱௩௫ |

| பதிகம். | பக்கம். |
|---|---|
| மனோன்மணிக்கண்ணி | ௱௪௧ |
| நந்தீஸ்வரக்கண்ணி (கீர்த்தனைகள்) | ௱௪௭ |
| பரமுத்தன் | ௱௫௰ |
| இல்லல்லாகூவென் | ௱௫௧ |
| பெண்கொண்டபேர் | ௧௫௩ |
| எத்தனையாட்டநீ | ௧௫௫ |
| ஐயையோநானென்ன | ௧௫௯ |
| சூத்திரப்பாவை | ௧௬௰ |
| வங்கெனுமுபதேசம் | ௧௬௧ |
| யானேயுனைநம்பினேன் | ௧௬௨ |
| எங்கள்குணங்குடி | ௧௬௩ |
| ஆண்டவனென் | ௧௬௭ |
| ஐயையோவென் | ௧௬௪ |
| ஏதேதுசெய்திடுமோ | ௧௬௫ |
| அல்லாகூவென்னுங்கள் | ௧௬௬ |
| கத்திக்கத்திக் | ௧௬௮ |
| தணவுகண்டிலனே | ௧௬௯ |
| நம்பினதற்கு | ௧௭௧ |
| எங்கள்குணங்குடியானே | ௧௭௨ |
| என்னையறிந்தேனே | ௧௭௩ |
| தாய்மார்களேபாவி | ௧௭௪ |
| மீசையுள்ளாண்பிள்ளை | ௧௭௬ |
| போவோங்குணங்குடி | ௧௭௭ |
| அதிமோகத்திருநடனம் | ௧௭௯ |
| ஆனந்தக்களிப்பு | ௧௮௰ |
| வாழிவிருத்தம் | ௧௮௨ |


பதிகவகராதி.

முற்றிற்று.

